# தசாவதாரம்

ஓர் தமிழ் நாடகம்.

நான்காம் பதிப்பு.

வி. கன்னையா கம்பெனியாரால்
பிரசுரிக்கப்பட்டது.

1930.

# முகவுரை

எம்பெருமானது தசாவதாரங்களை எமது மேடையில் நாடக ரூபமாக நடிக்கக் கண்டு களித்தோர் பலகோடி. அவர்களில் அநேகர் இந்நாடகத்தை புஸ்தகமாக வெளிப் படுத்த வேண்டுமென்று பன்முறை வேண்டியதாலும் இப் புஸ்தகத்தை நாடக காலத்திலோ அல்லது அதற்கு முன் னரோ படிப்பதினால் கதைப்போக்கு தெளிவாக தெரியக் கூடுமாகையாலும் நாம் இச்சிறு புஸ்தகத்தை இறைவனது திருவருளை முன்னிட்டு பிரசுரிக்கலானோம்.

இதுநிற்க இப்புஸ்தகத்தில் இடையிடையே சேர்த் திருக்கும் * இக்குறிபோட்டவை தவிர மற்ற கீதங்கள் எம துரிமை. இவற்றையாவது இப்புஸ்தகத்திலடங்கிய வசனங் களையாவது இந்நாடகத்தின் ஓர் பகுதியாவது முழுவது மாவது இதர கம்பெனிகள் கையாளுவதினால் சட்டப்படி அவர்கள் மீது வழக்கு தொடுப்பதற்கு பாத்திரமாவர் என் பதை தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இஃது இப்புஸ்தகத்தின் நான்காம் பதிப்பாகும். இத் துடன் 32,000 பிரதிகள் அச்சிடப்பட்டிருப்பதே இப்புஸ்த கத்தை மகாஜனங்கள் ஆதரித்து வருவதின் அறிகுறியா யிருப்பதைக் கண்டு ஆநந்தமடைகிறோம்.

ஸி. கன்னையா கம்பெனி.

---

சோதர சோதரிகாள்!

திருவாரூர் அரந்தாங்கி லயனிலுள்ள தில்லைவளாகம் பிரத்யக்ஷ ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியை தரிசனம் செய்யுங்கள்.

# தசாவதாரம்

---

## மஹாவிஷ்ணு ஸ்தோத்திரம்.

இராகம்: இந்து-பூபாளி. தாளம்: ஆதி.

பல்லவி

ஓம் நமோ ஸ்ரீ நாராயணா (ஓம்)

அனுபல்லவி

உலகம் யாவும் உனது உந்தியினில் வைத்து
உளமகிழ்ந்தே காத்தருளும் பரனே (ஓம்)

சரணம்

ஸ்ரீ மதுசூதன தேவப்ரபோதா
செல்வம் பொழியும் மலர்மகள் நாதா
சீதகிரண சாம்ப்ராஜ்ய சமேதா துரிய விநோதா
சுரர் தொழும் மருமலர் பாதா (ஓம்)

தீரதர வினுத சாமள காத்ரா
திவ்ய சுமங்கள வாரிஜ நேத்ரா
கோரு மகாமுனிவரர் புகழ் பாத்ரா பரம பவித்ரா
குணா பராத்பர சுர ஸ்தோத்ரா (ஓம்)

# தசாவதாரம்

## மச்சாவதாரம்.

### களம் 1. அங்கம் 1.

(காக்ஷி: ஸ்ரீமந்நாராயணன் மஹாலக்ஷ்மி சமேதராய் சேஷ சயனத்தில் வீற்றிருத்தல்.)

மஹாலக்ஷ்மி: ஸர்வேஸ்வரன் பூர்வ கல்பத்தின் முடிவில் சகல பிரபஞ்சத்தையும் தன் குக்ஷியிலடக்கிக்கொண்டு இந்த ஏகார்ணவத்தில் சேஷ பரியங்கத்தில் யோக நித்திரை செய்தார். பிரபோத சமயமாய் விட்டது. ஸ்திரீகளின் தர்மம் என்ன? நாதன் எழுந்திருக்கு முன்னமே எழுந்திருந்து பாதசேவை செய்வதே யாகும். நானும் அவ்விதமே அநுஷ்டிக்கிறேன்.

மஹாவிஷ்ணு: லக்ஷ்மி! சுப்ரபாதம். சுதினம். சென்ற கல்பத்தின்படியே பிரபஞ்ச வியாபாரத்தை ஆரம்பிக்கலாமென்று எண்ணுகிறேன்.

லக்ஷ்மி: நாதா! சத்ய சங்கல்பரான தங்களுடைய சங்கல்பப் படி நடப்பது உசிதமே.

மஹாவிஷ்ணு: ப்ரியே! பூர்வ கல்பத்தின் முடிவில் என்னுடைய குக்ஷியில் ப்ரவேசித்திருக்கும் பிரம்மாவை நாபி கமலமார்க்கமாக ஆவிர்பவிக்க எண்ணுகிறேன்.

## பிரம்மாவின் தோற்றம்.

பிரம்மா : பிதா ! பாலன் நமஸ்கரிக்கிறேன்.

நனுபாலிம்ப-ராகம் : மோஹனம். தாளம் - ஆதி.

பல்லவி

கனகாம்பரதா காருண்யநாதா காரும் அதீதா (கன

அனுபல்லவி

பன்னகசயன ஸ்ரீ பாப ரஹித கன
பதும தளநயன பரமபுருஷரான
சுவர்ணசரீர சுமுக வசீகரா (கன)
உவமையிலாத திவ்ய உருவலங்காரா
தவநிதியே என்னை தந்த தயாபரா
சரணம் ஸ்ரீ நாராயண சர்வமூல காரண (கன)

மகாவிஷ்ணு : வத்ஸா ! மங்களானிபவந்து. ஹிரண்யகர்பா ! பூர்வகல்ப கிரமப்படி உனக்கு ஸ்ருஷ்டி சக்தியும் ஸ்ருஷ்டிக்கிரமம் முதலானவைகளை அறிவதற்காக வேத பரிக்ஞான சக்தியும் கொடுத்தேன். முறையே பிரபஞ்ச சிருஷ்டி வியாபாரத்தை நடத்திவா.

பிரம்மா : ததாஸ்து.

பிரம்மா : (தனக்குள்) ஒருதடவை பார்த்தவுடனே நமக்கு வேதார்த்த பரிக்ஞானமுண்டாய்விட்டது. நம்முடைய ஞானமே ஞானம். நம்முடைய சக்தியே சக்தி. எப்படி ஸ்ருஷ்டி ஆரம்பிப்பது ? ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம் என்ற நான்கு பூதங்களைக் கண்டோம். இந்த ஏகார்ணவத்தில் ஸ்தலம் எவ்விதம் அமையும்.

(மதுகைடபர்கள் பிரவேசித்து பிரம்மாவை உற்றுநோக்கி)

மது : கைடபா ! இங்கே இருப்பது யார் கவனித்தாயா ?

கைடபன் : அண்ணா ! இவன்தான் பிரம்மதேவன்.
மது : சரி. சரி. கைகளிலிருக்கும் வேதபுஸ்தகங்களை அபஹரிப்போம். வா.
கைடபன் : அண்ணா ! புறப்படு சீக்கிரம்.

பாட்டு : இங்கிலீஷ் நோட்.

அன்புள சோதரனே கைடபனே வாராய் வாராய்.
அரியவென்னண்ணா மதுவே சேதி கூறாய் கூறாய்.
விரைவினில் இந்த பிரம்மதேவர் பக்கம் அணுகுவோம்.
அங்குவேதம் நான்கும் சென்றே கவருவோம். (அன்)
இதுதகி அலைநிறை பெரும்வாரியை நாமும் உண்ணுவோம்.
அகமகிழ்வுடனே சஞ்சாரம் பண்ணுவோம். (அன்)
(மதுகைடபர்கள் பிரம்மாவின் கையினின்றும் வேதத்தைப்பறித்து சமுத்திரத்தில் மறைகிறார்கள்.)
பிரம்மா : (மஹாவிஷ்ணுவை ஸ்தோத்திரம் செய்கிறார்.)

ராகம் : கமாஸ்-சீதாபதே நாமனுசுன. தாளம் ஆதி.

பல்லவி

தேவாதி தேவா தருணமே
தியங்கும் என்னை காக்கவேணுமே (தே)

அனுபல்லவி

பாவி மதுகைடப அரக்கர்
பகர் வேதம் நான்கும் கவர்ந்தனரே. (தே)

சரணம்

மறைமுற்றும் தேர்ந்தேன், எனவேஹகந்தை
மருவியதாலே மறந்தேனுன்னை
சரணம் பராபரதாயகனே சர்வகாரணனே ஸ்ரீநாரணனே
பிரம்மா : ஜகதீசா ! புருஷோத்தமா ! தங்களுடைய அனுக்ரஹத்தினால் கிடைத்த வேதத்தை நான் தானே அறிந்த

தாக கர்வங்கொண்டதற்கு இந்த சிக்ஷை பிராப்த மாயது. சர்வேஸ்வரா! நான் செய்த அபராதங்களை மன்னித்து, வேதங்களை தருவித்துக் கொடுத்து, முறைப்படியே வேதோபதேசம் செய்து கிருபை செய்யவேண்டும்.

மஹாவிஷ்ணு மச்சரூபமாய் நான்கு வேதங்களை நான்கு குழந்தைகளாக கொடுத்தல்.

பிரம்மா : பரமபுருஷா! ஆதிநாராயணா! குருநாதா! வேதங் களை உபதேசித்து என்னை கிருதார்த்தனாக செய்ய வேண்டும்.

விஷ்ணு ஹம்சரூபமாய் உபதேசித்தல்.

மஹாவிஷ்ணு : புத்ரா! உனக்கு வேதார்த்தங்களை உபதே சித்திருக்கிறேன். உன்னுடைய வேதங்களை அபஹரி த்த மதுகைடபன், என்ற இருவர்களையும் சம்ஹரித்து விட்டேன். அவர்களுடைய சரீரத்திலிருந்து பெருகிய மேதஸானது, இந்த ஏகார்ணவத்தில் பரவி, பாலின் மேல் ஆடைபோல் தோய்ந்து, கொஞ்சம் கொஞ்சமாய் கனபாவ மடைந்து பூமியாக அமையும். அதை இட மாகக் கொண்டு, ஜராயுஜம், ஸ்வேதஜம், அண்டஜம், உத்பிஜம், என நான்கு விதங்களாக பிராணி வர்க்கங் களையும், மற்றும் தேவாசுர வர்க்கங்களையும்,* ஸ்ருஷ்டி த்து வருவாயாக!

பிரம்மா : பகவன், ஆக்ஞைப்படி அனுஷ்டித்து வருகிறேன்.

ருத்திரமூர்த்தி பிரவேசம்.

ருத்திரமூர்த்தி : கமலசம்பவா! சதாசிவமாகிய நான் உம்மு டைய லலாடத்திலிருந்து ஆவிர்பவித்தேன். உம்மு

*டைய ஸார்த்துவமுக நோக்கப்படியே ஸ்ருஷ்டி ஆரம்பித்தால் பிரபஞ்ச விகாசம் சரியாக நடைபெறுது. ஆகையால் என்னுடைய ஸம்ஹாரத் தொழிலைக் கொண்டு, முதல் முதல் உம்முடைய ஐந்தாவது சிரசை கொய்துவிடுகிறேன்.*

பிரம்மா : *நீலலோகிதா! நீ என்னுடைய சிரசைக் கொய்த பாவம் உன்னை விடாது. நீ ப்ரேத பைசாசங்களுடன் பிக்ஷுகனுக, சுடுகாட்டில் வாசம் பண்ணக்கடவாயாக! அதுவே உனக்கு பிரதிபலனுகும்.*

பிரம்மா சரஸ்வதி, மஹாவிஷ்ணு லக்ஷ்மி, பரமசிவன் பார்வதி ஆகிய மும்மூர்த்திகளின் தோற்றம்.

விஷ்ணு : *நாமூவரும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்று வியாபாரங்களை முறையே நடத்தி வருவோம்.*

ததாஸ்து.

*முதல் அங்கம் முற்றிற்று.*

---

## கூர்மாவதாரம்

### களம் 1. அங்கம் 2.

நாரதர் : *யாரோ ஒரு பெரியவர் வருகிறுரே. இவரின்னுரென்று தெரியவில்லையே. சமீபத்தில் நெருங்கிப் பார்ப்போம். அடடா பெரிய விருத்தராகவல்லவோ இருக்கிறுர்.*

*காகபூசுண்டர் வருகிறுர்*

நாரதர் : *தாதா, தாங்கள் யார் தெரியவில்லையே.*

பூசுண்டர் : *நீ யார்.*

நாரதர் : நான் பிரம்மபுத்திரன் நாரதன், தாங்கள் யார் தெரியவில்லையே.

பூசுண்டர் : நான் பூர்வ கல்பத்துக் கிழவன். என்பெயர் பூசுண்டன்.

நாரதர் : அப்படியா, நமஸ்காரம். நமஸ்காரம்.

பூசுண்டர் : நாரதா! உன் சகோதரர்களான ஸனகாதிகள் சௌக்கியமாயிருக்கிறார்களா ?

நாரதர்: அவர்கள் பிறந்தது முதலே திகம்பரர்களாய் நிவர்த்தி தர்மத்தை அனுஷ்டித்தவர்களாய் விட்டார்கள்.

பூசுண்டர் : காஸ்யபர் முதலான நவப்ரஜாபதிகள் க்ஷேமமா?

நாரதர் : அவர்கள் பிரவர்த்தி தர்மநிஷ்டர்களாய் சந்தான சம்பத்துடன் சௌக்கியமாயிருக்கிறார்கள்.

பூசுண்டர் : உனது வியாபாரம் எப்படி ?

நாரதர் : ஏதோ இப்படி சஞ்சரித்துக் கொண்டிருக்கிறேன்.

பூசுண்டர் : இப்போது எங்கே புறப்பட்டதோ.

நாரதர் : காஸ்யப குமாரர்களான தேவர்களும் அசுரர்களும், அடிக்கடி கலகம் செய்துக்கொண்டு, பரஸ்பரம் விரோதிகளாகவே இருக்கிறார்கள். ஏதோ சமாதானப்படுத்தி வருவோமென்று புறப்பட்டேன்.

பூசுண்டர் : நீயா சமாதானப் படுத்துகிறவன். சரி. சரி. அறிவேனுன்னை.

நாரதர் : சமாதானத்திற்கு உடன்படாத பக்ஷத்தில், ஸ்ரீமந் நாராயணனிருக்கிறார்.

பூசுண்டர் : எல்லாம் அவருடைய சங்கல்பப்படிதான் நடக்கும்.

நாரதர் : நடக்கட்டும். நடக்கட்டும்.

ராகம்: மத்தியமாவதி ; அலகலெல்லலாடக ; தாளம்: ரூபகம்.

பல்லவி

பரம புருஷ பாவனஸ்ரீ பாக்யபத்மநாபனே (பர)

அனுபல்லவி

ஸ்ருதிபுரான அதிகார, சுதர்சனதரனே கம்பீர (பர)

சரணம்

முராஹரி கருணாலயனே
முக கமல வசீகரனே
கிரணகிரீட சிங்கார
கதியருள் தாராய் காராய். (பர)

இரண்டாவது அங்கம் முற்றிற்று.

---

## களம் 1. அங்கம் 3.

## இந்திரன் சபை

(தேவராஜன், தேவர்களும் அரம்பை மாதர்களும் புடைசூழ சிம்மாஸனத்தில் வீற்றிருத்தல்.)

பாட்டு: பார்வதி மெட்டு.

தேவர்கள்.—

அமரேசா, அருள்நேசா, அலங்கார விலாசா
இமையோர்கள் போற்றும் இறைவனே வாராய்
இனிமை பெருகி மகிழுவே (அம)
அருமறை சதமகமியற்றிய தேவா
அழகி இந்திராணி மகிழ் புனித சுபாவா
அமலனருளினோடு, பெருகி வாழ்க. (அம)

பாட்டு : பார்வதி மெட்டு.

(அரம்பைமாதர் பரிடிக்கொண்டு நடனம் புரிதல்)

ரம்யா சௌந்தர ரூபனே
ரஞ்சித மேவு சல்லாபனே
எம்மிறையவப்ர தாபனே
இனிய புகழ்கொள் தீரா, எழிலான எமதிந்திரா
இன்பமார், சம்ப்ரமா, இங்கிதா
மங்களா, துங்கனே, வந்துகார்
அமரர்கள்பதி அதிகுணநிதி, அரியமுனிவர் நேசா
அந்தமுள நல்லிந்திரைமகிழ், அன்பனே விசுவாசா (ரம்)

**இந்திரன் :** பிரஹஸ்பதிகாமசத்ருரோ? நூறு அஸ்வமதே யாகங்களைச் செய்து அதன் பலனாக, இந்த ஸ்வர்க்காதிபத்யம் பெற்றேன். இதிலும் இப்படி கஷ்டம் அனுபவிக்க வேண்டுமா : கஷ்டம்.

**மாதலி :** பிரபோ. நாரத மகரிஷி வருகிறார்.

நாரதர் பிரவேசம்.

(இந்திரன் நாரதரை வணங்கிப் பாடுதல்.)

ராகம் : சுத்தபங்காளா-ராமபக்திசாம்ராஜ்ய-தாளம் : ஆதி.

பல்லவி

மாமகத்வ முனிவோரே மனது
மகிழ்வாய் வருகுவீரே.

அனுபல்லவி

பூமேல் அயனார் புத்திரவரதரே
போற்றினேன் ஆசிபுகல்வீர் நாரதரே (மாம)

சரணம்

புனித நற்றவஞ் செய்யும் புண்ணிய ரூபா
போத சங்கீத சுய்க்யான தீபா

தனிமுதல் நாரண தத்பத த்யான
தத்வ விசேஷ தயாபரரான (மாம)

இந்திரன் : மகரிஷே! அடியேங்களுடைய கஷ்டம் தாங்கள் அறியாதது ?

நாரதர் : புரந்தரா! சகல தேவாதி பத்தியத்தைப் பெற்ற உனக்குமா கஷ்டம் ?

இந்திரன் : என்னுடைய சகோதரர்களான அசுரர்கள், என்னுடைய சுதர்ம சபையையும், ஸ்வர்க்க வைபவங்களையுங் கண்டு, அசூயை கொண்டவர்களாய், வைரபாவங் கொண்டு அடிக்கடி யுத்தம் செய்ய ஆரம்பிக்கிறார்கள். அவர்களாலடிபட்டு நம்வர்க்கத்தார் மரணமடைய வேண்டியதா யிருக்கிறது. என்ன மார்க்கம் செய்தால் மரணமில்லாதிருக்கலாம்.

நாரதர் : தேவராஜா! க்ஷீர சமுத்திரத்தைக் கடைந்தால் அதிலிருந்து அமிர்தம் உண்டாகும். அதை புஜித்தால் மரணம் ஏற்படாது.

இந்திரன் : அப்படி செய்ய சாத்தியப்படுமா ?

நாரதர் : தேவர்கள் ஒரு வர்க்கத்தாரால் இந்தக் காரியம் செய்ய சாத்யப்படாது.

இந்திரன் : ஆனால் என்ன செய்ய வேண்டும்.

நாரதர்: தேவவர்க்கத்தார் அசுரவர்க்கத்தார் இருவகையாரும் ஒன்றுசேர்ந்து மந்தர பர்வதத்தை மத்தாகவும் வாசுகியை நாணாகவும், ஏர்படுத்தி க்ஷீர சமுத்திரத்தை கடையவேண்டும்.

**இந்திரன் :** பின்னும் அசுரர்களுடைய உபத்திரவம் அதிக மாகத்தானே ஆகும்.

**நாரதர் :** அதற்கெல்லாம் நீ யோசிக்காதே. ஸ்ரீமந் நாராயண னுடைய கருணையால் உனக்கெல்லாம் அனுகூலமாகவே முடியும்.

**இந்திரன் :** ஆனால் அப்படியே செய்வோம்.

**நாரதர் :** நானும் இந்த விஷயத்தை அசுரருக்குச் சொல்லி சரிப்படுத்துகிறேன். பயப்படாதே.

மூன்றும் அங்கம் முற்றிற்று.

---

## இடைக்காக்ஷி

நாரதர் பாட்டு.

ராகம் : மயூரத்வொனி : ராகசுதாரஸ- தாளம் : தேசாதி.

பல்லவி

நாமுபகார மதாயொரு யோசனை
நன்றாக செய்வதே சரியே. (நாமு)

அனுபல்லவி

மாமணாளனை மாதவனருள் கொண்டு (நாமு)

சரணம்

கடையனும் விடபன்மன் கருதும் நிசாசரன்
அடியொடு கெடமற்றும் அமரர் இந்திரன் வாழ. (நாமு)
பார்க்கடலில் மந்திர பர்வதம் நாட்டியே
கார்க்கும் வாசுகி யதின் கயிறாய் சுற்றி கடைய (நாமு)
மத்திக்க வருமமுதத்தை தேவர்கட்கீந்தால்
சத்துரு பயமற்று சாகாதிருப்பாராதால் (நாமு)

## களம் 1. அங்கம் 4.

# விடபன்மன் ஆலோசனை மண்டபம்.

(விடபன்மன் அசுரர்கள் புடைசூழ சிம்மாசனத்தில் வீற்றிருத்தல்.)

**அசுரர்கள் :**

ராகம் : குந்தளவராளி : சரஸரசமைரைக. தாளம் : ஆதி.

பல்லவி

சரஸ சுகுணனே ஸமர்புரிதீரா
தயவுடன் எமைக்காராய் (சர)

அனுபல்லவி

சுரகுலகாலா அசுர அனுகூலா
பரவு யதிதி யருள் பாலா சீலா. (சர)

சரணம்

குலபூதரமோடுலகம் நடுங்கிட
நலமாயரசே செய்யும் வீரா
பலமுறுபுகழ் பெருகிய அதிவிதரண
இலகிடும் அதிஜெய இன்ப சிங்காரனே (சர)

[நடனப்பெண்கள் பாடிக்கொண்டு நடனம் புரிகிறார்கள்]

**நடனப் பெண்கள் :**

ராகம் : சுபோஷனி : ரமின்சுவாரெருரா. தாளம் : ரூபகம்.

பல்லவி

துரந்தரா சுபகரா, ஜொலிக்குமாமுடிசிரா (துர)

அனுபல்லவி

சுராந்தகா சுயநலா சுகுண விஷயகுதூகலா (துர)

சரணம்

சகலலோக வசிகரா, சரசராஜ நிசிசரா
மகிமை பெருகும் ரஞ்சிதா, மா தயாளஇங்கிதா (துர)
பிரபுமக விகிதனே பிரபலவிகசிதனே
திருமலைநிகர் திண்புயா க்ஷேமமாய்வாழென்றுமே (துர)

**அசுரன் :** அசுரேந்திரா நாரதமகரிஷி வருகிறார்.

நாரதர் பிரவேசம்.

[விடபன்மன் அவரை வரவேற்றுப் பாடுதல்]

ராகம் : ஜுஞ்கலா-அனுதுடனுகானு. தாளம் : ஆதி.

பல்லவி

சனுதன சுதர்மசீலரே (சனு)

அனுபல்லவி

மனோலய யோக மார்க்க விநோதா
வரநாரதமுனி நாதபுனிதமா (சனு)

சரணம்

அனுதைகள் சகாயா சுகிர்தனே
அருமறை சொல்வாயா
முன்னாள் பிரம னருளிய வரபாலா
மோன பரம ஆனந்த தவமூலா (சனு)

**விடபன்மன் :** பகவன்! நாரதமகரிஷியே நமஸ்காரம். எங்கே இப்படி சஞ்சாரமாக புரப்பட்டது.

**நாரதர் :** அசுராதிபதி! உங்களிடத்தில் ஒரு விஷயம் சொல்லவேண்டுமென்று இப்படி சஞ்சரித்துக்கொண்டு இங்கு வந்தேன்.

**விடபன்மன் :** என்ன விஷயமது.

**நாரதர் :** நேற்று தேவகோஷ்டியில் ஒரு சமாசாரம் கேள்விப்பட்டேன்.

**விடபன்மன் :** என்ன! என்ன! சொல்லுங்கள்.

**நாரதர் :** தேவர்கள் தங்கள் வர்க்கத்தாருக்கு விசேஷ பலம், புஷ்டி, அமரத்வம் உண்டாவதற்காக அம்ருதமதனம் செய்வதாக உத்தேசித்திருக்கிறார்கள்.

**விடபன்மன் :** ஏன் : நாமும் அப்படிச் செய்வோமே.

**நாரதர் :** அந்தக் காரியம் ஒரு வர்க்கத்தாரால் செய்ய சாத்தியப்படாது. இரு வர்க்கத்தாரும் ஒன்று சேர்ந்து நடத்தினுல்தான் சாத்தியப்படும்.

**விடபன்மன் :** அப்படிச் செய்ய அவர்கள் இணங்குவார்களா?

**நாரதர் :** இணங்காமலென்ன! அவர்கள் அபிப்பிராயம் ஒரு விதமாக இருக்கிறது.

**விடபன்மன் :** அதென்ன அபிப்ராயமோ?

**நாரதர் :** வேறொன்றுமில்லை. ஒருவகுப்பினர்களால் முடியாத காரியமானபடியால் உங்களையும், பங்காகச் சேர்த்துக் கொள்வதென்றும், அப்படி பங்காக சேர்த்துக்கொள்வதில் அவர்களே வாசுகியின் தலைப்புறம் பிடித்திழுக்கிறதென்றும், தலைப்புறமிருந்து இழுக்கிறவர்களுக்கு இரண்டு பங்கென்றும் பேசிக்கொள்ளுகிறார்கள்.

**விடபன்மன் :** மகரிஷே! இந்த அசுரவர்க்கத்தில் எல்லோருக்குமே பலம் உண்டென்பது உண்மை. நாங்களே தலைப்புறம் இழுக்கிறோம். எங்களுக்கே இரண்டு பங்கு ஏற்படட்டும்.

**நாரதர் :** எப்படியோ சரி.

**விடபன்மன் :** எப்படியோ, அப்படியே என்று சொல்லக்கூடாது. தலைப்புறம் நாங்களேதான் இழுப்போம். எங்களுக்கே இரண்டு பங்கு.

**நாரதர் :** சரி அப்படியே ஏற்பாடு செய்யலாமா?

**விடபன்மன் :** ஏற்பாடு செய்யலாம்.

**நாரதர் :** சரி, நான் வருகிறேன்.

நான்காம் அங்கம் முற்றிற்று.

## இடைக்காக்ஷி.

### நாரதர் பாட்டு

ராகம்: தர்பார்-நித்யரூப எவரிபாண்டித்யமே. தாளம்:-ரூபகம்.

பல்லவி

சுத்தஞான ஸ்வரூபரான
    சுமுத ஸ்ரீதரா நமோ (சுத்த)

அனுபல்லவி

சத்யதர்ம பரிபால சகலலோகமூல (சுத்த)

சரணம்

சங்குசக்ர சாரங்க கட்கதண்டதாரா
    சதுர்மறை ஆகம புராணம் போற்றும் பூரா
துங்க ஆதிசேஷசயன சூரியனே பரிபூரா
ஸ்தோத்ரம் புரிந்தேன் எனைக் காத்தருள் ஸ்ரீநாரா(சு)

## களம் 1. அங்கம் 5.

(தேவர்களும் அசுரர்களும் மந்தரகிரியை மத்தாகவும் வாசுகியை கயிறாகவும் கொண்டு பார்கடலை கடைகிறார்கள்.)

**நாரதர்:** சரி. சரி. நிறுத்தாமல் கைகள் சலிக்காமல் ஒரே நிதானமாய் இழுங்கள்.

**தேவர்கள்:** ஸ்வாமி என்ன—பெரிய கோலாகலசப்தமல்லவோ ஏற்படுகிறது.

**நாரதர்:** அப்படித்தான் ஏற்படும். கடையுங்கள். கடையுங்கள்.

**அசுரர்:** ஓ! ஹோ! மந்தரபர்வதம் அமிழ்ந்துவிட்டதே. நாம் எப்படி கடைகிறது.

**தேவர்கள்:** அடியில் ஆதாரமிருந்தால்தான் கடைய முடியும். என்ன செய்யலாம்.

**நாரதர் :** எல்லாவற்றிற்கும் ஆதாரமானவனை பிரார்த்தித்தால் இப்போது இதற்கு ஒரு ஆதாரம் ஏற்படும்.

[தேவர்களும் அசுரர்களும் பகவானைப் பிரார்த்திக்கிறார்கள்.]

ராகம் : குஹரஞ்சனி-இகனேதாளஜாலனுரா. தாளம் : ஆதி.

பல்லவி

பராபரா பரமபுருஷனே
பங்கஜ லோசனனே பரந்தாமனே (பரா)

அனுபல்லவி

புராதன புவனதரா, புராதன புவனதரவினுத
புனிதபவ ரஹித கருணாகர (பரா)

சரணம்

பெரிய மந்தரகிரி கடல்தனில் ஆழ்ந்ததே
பெருகும் அமுதம் வருமெனும் ஆவல் தீர்ந்ததே
தருணமிதே தந்திகாரும்
தருணமிதே தந்திகாரும் தயாபராபரனே
அடியேன் துயர்தனை நீரும். (பரா)

---

## மஹாவிஷ்ணு கூர்மரூபமாய் மலையை தாங்குதல்

**தேவர்கள் :** ஹா! ஹா! நாமொன்று நினைக்க தெய்வமொன்று நினைத்தது. அமிர்தம் வேண்டுமென்று கடைய காளகூட விஷமல்லவோ ஆவிர்பவித்து விட்டது. ஹா! ஹா! விஷஜ்வாலை சகிக்க முடியவில்லையே. உலகமே நாசமடைந்து விடும் போலிருக்கிறதே. தேவாதிதேவா! பரமேசா! இச் சமயம் ரக்ஷகன் யார். யாரை சரணமடைவோம்.

பரமசிவன் தோற்றம்.

**பரமசிவன் :** பயப்படாதீர்கள்! பயப்படாதீர்கள்! பயப்படாதீர்கள்!

நாரதர் : ஏதோ விஷம் உண்டாச்சுதென்று நிறுத்திவிட வேண்டாம். மறுபடியும் கடையுங்கள்.

[ஐராவதம், உச்சைசிரவஸ், கற்பகவிருக்ஷம், காமதேனு, வாருணி, கௌஸ்துபம், சிந்தாமணி, அப்சரஸ் லக்ஷ்மி, சந்திரன், முதலியவை ஆவிர்பவித்தல்.]

நாரதர் : ஹா ! ஹா ! இதற்காக ஏன் கலகம். கலகம் வேண்டாம். நமக்கு முக்கியமாய் வேண்டியது அமிர்தம். அதை அடைந்த பிறகு, இவைகளை சௌகர்யப்படி யார் யார் எது வேண்டுமோ அதை எடுத்துக்கொள்ளலாம்.

தேவர்கள் : அப்படியே செய்வோம்.

[தன்வந்திரி அமிர்தம் கொண்டுவருதல்]

தன்வந்திரி : காஸ்யப குமாரர்களே ! நீங்கள் எல்லோரும் சகோதரர்கள். எல்லோரும் இந்த விஷயத்தில் சிரமப்பட்டவர்கள். ஆத்திரப்படவேண்டாம். இதை ஓரிடத்தில் வைத்து பகவானுக்கு நிவேதனம் பண்ணி முறையே எல்லோரும் புஜிக்கலாம். பதரவேண்டாம்.

தேவர்கள்: (தமக்குள்) அசுரர்களுக்கு அமிர்தபானம் இல்லாமல் போவதற்கு என்ன வழியோ அதை கவனியுங்கள்.

அசுரர் : (தமக்குள்) தேவர்களுக்கு அமிர்தமில்லாமல் செய்ய வேண்டும், இதில் என்ன கலகம் வந்தாலும் வரட்டும். எம்மாத்திரமிந்த தேவர்கள். பார்க்கலாம் ஒரு கை.

நாரதர் : பொறுங்கள். பொறுங்கள். இதோ பூஜை செய்து நிவேதனம் பண்ணுகிறேன்.

மோகினி ப்ரவேசம்.

அசுரர் : யார் இந்த பெண்மணி ? என்ன ரூபம் ! என்ன அழகு ஆஹா ! இந்தப் பெண்ணின் சௌந்தர்யத்தைப்

பார்த்தால் இந்த க்ஷீர சமுத்திரத்தில் உண்டான அப்சரஸும், லக்ஷ்மியுங்கூட சௌந்தர்யவதிகளல்லவென்றே நிச்சயிக்கலாம். இத்தண்ணமுதத்தைகாட்டிலும் இப்பெண்ணமுதமே சிலாக்யம்.

தேவர்கள் : யார் இந்த தாய்? அகஸ்மாத்தாய் இங்கு வந்த காரணமென்ன, தெரியவில்லையே.

மோகினி : தேவர்களும் அசுரர்களும் ஓரிடத்தில் கூடி வாக்குவாதம் செய்துக் கொண்டிருக்கும் காரணம் யாது?

நாரதர் : அம்மணி எல்லாம் இந்த அமிர்தத்தின் விஷயமாகத்தான்.

மோகினி : இந்த அல்ப காரியத்திற்காக வீண் கலகம் வேண்டாம்.

நாரதர் : நியாயம். நியாயம்.

மோகினி : தேவர்கள் ஓர் பக்கவிலும், அசுரர்கள் ஓர் பக்கவிலும், பந்தியாக இருக்கட்டும். நான் பிரதக்ஷணமாக இந்த அமிர்தத்தை எல்லோருக்கும் அளிக்கிறேன்.

எல்லோரும் : உசிதம். உசிதம். உசிதம்.

இந்துஸ்தானி : மேரேபடிநி

மோகினி பாட்டு.

தேவாசுர குலத்தோரே திவ்ய அமுதம் உமக்கே நானே
தாரேன் பொருப்பீரே.

கேவலமிதே கலகம், கண்யவான் நீர் செய்தால் கேலி பேசு
மிவ்வுலகம்.

விரோதம் வேண்டாம் இதைவிட்டு நீர் இருப்பீரே
விவேகமாக இதையே நீர் கவனிப்பீரே.

அசுரன் : ஆஹா! என்ன நடை! என்ன நடை! அம்ஸத்தின் கெதியும் தோற்றுப்போம்,

அசுரன் : என்ன லக்ஷணம்! என்ன ஸௌந்தர்யம்!

ராகு : என்ன—அந்த பந்தியிலேயே பரிமாறிக்கொண்டிருக்கிருள். இந்த பந்திக்கு வரக்காணேமே.

அசுரன் : அவசரப்படாதே. அந்தம்மாள் நல்ல ஸ்வபாவமுடையவள். வரிசையாய் பரிமாறி வருவாள்.

ராகு : ஒஹோ! என்னமோ வகை மோசமாக இருக்கிறது. அமிர்தம் அந்த பந்தியிலேயே சமாப்தியாய் விடும்போலிருக்கிறது. நாம் அந்த பந்தியில் போய் சேர்ந்து விடுவோம்.

மோகினி : அடே ராகு! தெரியுமுன்னே. அசுரகோஷ்டியிலிருந்து தேவகோஷ்டியில் வந்து கலந்துகொண்டாயோ. இதோ கையிலிருக்கும் அகப்பையே சக்ரமாகிவிட்டது பார். சேதித்தேன் உன் தலையை.

ராகு, கேது, தோன்றுதல்.

மோகினி : இந்த சக்ரம் பாய்வதற்கு முன்னமே ராகு அமிர்தபானம் செய்துவிட்டபடியால் சாகாமல் உயிருடன் இருக்கிருன். இவர்களும் தேவகோஷ்டியிலிருக்கட்டும். அமிர்தம் பரிமாறியாய் விட்டது.

அசுரர் : அடி சண்டாளி! உன் ரூபத்தை பார்த்தல்லவோ மயங்கி மோசம் போனேம். இப்படி வஞ்சகம் செய்வாயென்று தெரியாமல் போயிற்றே.

அசுரர் : இவள் சாமான்ய ஸ்திரியே அல்ல. ஏதோ மாயையாய் இருக்கிறது. அந்தக் கபடக்காரனை நாராயணனே இவ்விதம் செய்திருக்கவேண்டும்.

நாரதர் : அப்படித்தான். நாராயணன்தான் அப்படிச்செய்தான். இனி என்ன செய்கிறது. தேவர்கள் சாத்வீக சுபாவமுள்ளவர்களாகையால் பகவான் கிருபை செய்தார்.

அசுரர்: நாரதரே! எல்லாவற்றிற்கும் நீரும் கலந்துகொண்டே தானிருந்து வந்தீர். நாங்கள் அப்சரஸ் முதலான வஸ்துக்களின்மேல் ஆசைகொள்ளாமல், கோரமான தவம் செய்து வேண்டிய வரங்களைப்பெற்று இந்த தேவர்களை ஜெயிக்க வழி தேடுகிறோம்.

ஐந்தாம் அங்கம் முற்றிற்று.

---

## களம் 1. அங்கம் 6.

(ஸ்ரீவைகுண்டம்: சனகாதியர் ஸ்ரீமந்நாராயணனை தரிசிக்கவருதல்)

சனகாதி:

ராகம்: ஜயந்தஸ்ரீ-மருகேலரா. தாளம்: ஆதி.

பல்லவி

அகிலச்சராசர ரக்ஷக

அனுபல்லவி

சுகஞானியர்கள் மனந்தோறும் வைகும்.
சுத்தபரப்ரம்ம நித்ய ரூபனே (அகில)

சரணம்

வேத அதிகார விமல நிர்விகார
போத அந்தரங்க புனித சுந்தராங்க
ஆதிமத்யானந்த ரகிதனுயமர்ந்த
கீததத்வசாந்த நிற்குண முகுந்த. (அகில)

ஸநகர்: சகோதரர்களே! அப்ராக்ருதமான விரஜையென்னும் புண்ய நதியை கடந்து வந்தோம். போதானந்த பர்வதத்தைக் கண்டோம். இதோ பார்த்தீர்களா ஸ்ரீ வைகுண்டம் பவனத்தை? முப்பத்திரண்டு வ்யூக பேதங்களுடனும் மஹானந்த மயமான சிகரங்களுடனும்,

கோடி சூர்யப்ரகாசமாய் பரம ஆனந்தத்தை கொடுக்கும் ப்ரணவ விமானத்தைப் பார்த்தீர்களா? இந்த விமானத்தின் மத்தியில் அஷ்டாக்ஷர மஹா மந்தர மண்டபத்தில் சிதானந்த பீடத்தில் ஸ்ரீதேவி, பூதேவி சமேதனாய், அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹனாய் விளங்கும் ஸ்ரீமந்நாராயணனை தெரிசிப்போம் வாருங்கள்.

சனகாதியர் வைகுண்டத்துள் பிரவேசிக்கிறார்கள்.

ஸநகர் : துவாரபாலகர்காள்! ஏது கதவு சாற்றியிருக்கிறது. கதவைத் திறவுங்கள்.

விஜயன் : ஸ்ரீயப்பதியின் ஏகாந்த சமயமாகையால் உள்ளே பிரவேசிக்க அவகாசமில்லை.

ஸநகர் : ஹா! எங்களுக்குமா ஸமயம் எதிர்பார்த்து தெரிசிக்க வேண்டுமென்ற நியமம்.

விஜயன் : சமயமில்லை யென்றால் செல்லலாம். நிற்க வேண்டாம்.

ஸநகர் : ஆஹா! இவர்கள் விஷ்ணு பார்சதர்களாகவிருந்தும் சாதுக்களின் மகிமை அறியாதவர்களாக இருக்கிறார்கள். கொஞ்சம் எடுத்துச் சொல்வோம். பார்சதர்காள்! பிரம்மாவின் மானச புத்திரர்களான எங்கள் மகிமையை நீங்கள் அறியீர்கள் போலும்.

ஜயன் : என்ன! அவகாசமில்லை யென்று சொன்னால் கொஞ்சமேனும் கவனியாது உங்கள் மகிமையைப் புகழ்ந்து பேசுகிறீர்கள்.

விஜயன் : செல்லுங்கள் : நிற்கவேண்டாம்.

ஸநகர் : ஆஹா! சத்வகுண பூயிஷ்டமான இந்த வைகுண்டத்தில் அவகாசமில்லை யென்று எங்களை நிராகரித்த தோஷத்தால் அடா! நீங்களிருவரும் இந்த ஸ்தானத்தி

விருந்தும் நழுவி பூலோகத்தில் அநேக ஜன்மம் ராக்ஷஸர்களாக பிறக்கக் கடவீர்கள்.

**ஜயவிஜயர்கள்:** ஆஹா! ஸ்ரீயப்பதி! நாராயணா! என் செய்வோம்.

(ஸ்தோத்ரம் பாட்டு.)

ராகம்: கௌளிபந்து ; தெரெதீயகராதா : தாளம்: ஆதி.

பல்லவி

கருணாகர நீயே ஸ்வாமி
கருத்தொடு மணிக்கதவினைத் திறப்பாயே. (கரு)

அனுபல்லவி

இருள்மாயா ஜகத்திடை எமைஜெனிக்க
எண்ணினாலும் வருவாயெம்மை காக்க (கரு)

சரணம்

மதியாதவர் நிலை மாறினும் மாறா
மகுத்வ முனிவர் சாபவாய் மொழிகூற
ததிநீயருள் செய்ய சரண்புகுந்தோமே
தவறு பொறுத்திடவே பணிந்தோமே. (கரு)

**ஜயவிஜயர்கள் :** ப்ரபோ! சர்வேஸ்வரா! கிஞ்சின்யர்களாகிய நாங்கள் அக்ஞானத்தினால் சாதுக்கள் விஷயத்தில் செய்த அபசாரங்களை மன்னித்து எங்களுக்கு ஏற்பட்ட சாபத்தை நிவர்த்தி செய்து ரக்ஷிக்கவேண்டும்.

**மஹாவிஷ்ணு :** பார்சதர்காள்! அவரவர்கள் செய்த கர்மத்தின் பலனை அவரவர்கள் அனுபவித்தே தீரவேண்டும். மேலும் இந்த பிரம்ம வித்வரிஷ்டர்களான இந்த மஹான்களுடைய வாக்கை மாற்ற யாரால் முடியும். சர்வ சக்தனான என்னாலும் முடியாது. ஆனால் பக்தர்களான உங்கள் விஷயத்தில் ஒரு சௌகர்யம் செய்து கொடுக்கிறேன். அதாவது நீங்கள் பூமியில் நூறு ஜன்

மம் ராக்ஷஸர்களாகப் பிறந்து என்னுடன் மித்ருபாவத்துடனிருந்து பிறகு இந்த வைகுண்ட பதவிக்கு வருகிறீர்களா? அல்லது மூன்று ஜன்மம ராக்ஷஸர்களாகப் பிறந்து என்னுடன் சத்ருபாவத்துடனிருந்து பிறகு இந்த வைகுண்ட பதவிக்கு வருகிறீர்களா? சொல்லுங்கள்.

ஜயன்: விஜயா! உன் யோசனை என்ன?

விஜயன்: எல்லாம உன் அபிப்பிராயப்படியே.

ஜயன்: அநேக ஸம்வத்ஸரக்கணக்காக பத்யமில்லாமல் மருந்து சாப்பிட்டு வியாதியை சொஸ்தப்படுத்திக்கொள்வதை பார்க்கிலும், இரண்டு மூன்று நாட்கள் கடும் பத்தியத்துடனிருந்து வியாதியை சொஸ்தப் படுத்திக் கொள்வதுபோல் மூன்று ஜென்மம் என்ற ரீதியையே கேட்டுக்கொள்வோம்.

விஜயன்: உசிதம். அப்படியே கேட்டுக்கொள்வோம்.

ஜயன்: சர்வேஸ்வரா! மூன்று ஜன்மம் ராக்ஷஸ ஜென்மத்தையே, ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனால் தாங்களே பூலோகத்தில் அவதாரம செய்து எங்களை சம்ஹரித்து ஆட்கொள்ள வேண்டுமாக பிரார்த்திக்கிறோம்.

மஹாவிஷ்ணு: அப்படியே ஆகும்! செல்லலாம்.

மஹாவிஷ்ணு: யோக சிரேஷ்டர்களே! தங்களுடைய சாபத்தை இந்த பார்சதர்கள் அனுபவிக்கும்படியாய் சம்பவித்தது. ஆனால் ஒரு விசேஷம், நானும் மஹான்களுடைய வாக்கினால் ஒவ்வொரு யுகங்களிலும் பூலோகத்தில் அவதாரம் செய்ய வேண்டியவனா யிருக்கிறேன்.

சாதுக்களான தங்களைப்போன்ற மஹான்களுடைய பெருமையே பெருமை. இந்த பெருமையை சகல லோகங்களும் அறியட்டும். எதாஸ்தானம் செல்லுகிறேன்.

6-வது அங்கம் முற்றிற்று.

---

## களம் 1. அங்கம் 7.

## வராகவதாரம்.

பூமிதேவி :

பாட்டு. பார்வி மெட்டு.

கிருபாகரனே கெதிநீயே
கருணைபுரியும் பரனே.
கார்நிறதேகா சுகுணகா பரந்தாமா
சுரர்பணிநேமா கருதும ஸ்ரீ நாரணனே
காரும் சீரார்கணனே துளவதரனே.

பூமிதேவி : ஸ்ரீமந்நாராயணனுடைய ஆக்ஞையின்படி என்னிடம் உண்டாகும் தான்யங்களாலும், ஒஷதிகளாலும் சகல பிராணிகளையும் ரக்ஷிப்பது எனது கடமை. பிராணிகள் பயிரிடுவதற்காக என்னை எவ்வித கஷ்டப்படுத்தினும் நான் பொருத்துக்கொள்வேன். ஆகையால் எனக்கு சர்வம்ஸஹா என்று பெயர். ஆயினும் பாபிகளுடைய அதிக்ரமத்தை மட்டும் பொருக்க சக்தியற்றவளாக இருக்கிறேன். ஹா என்ன! வலது கண் துடிக்கிறதே! என்ன ஆபத்து சம்பவிக்குமோ தெரியவில்லை. யார்? குரூரமான ஒருவன் வருகிறான். இவனுடைய ரூபத்தைப் பார்த்தால் ராக்ஷஸனைப்போல் தோற்றுகிறது. என்ன தீங்கு நேரிடுமோ அறியேன்.

**இரண்யாக்ஷன் :** பூமிதேவி ! வா இங்கே.

பாட்டு பார்வி மெட்டு.

பல்லவி

வசமதி உன்னை அலைகடலினில் மடியவிடுவேனே
முடிய அடுவேனே (வசு)

அநுபல்லவி

வந்து காக்கும் தீரன் யார்
வகுத்தெனக்கு நீ புகலடி துணை வரத்துணியாரடி (வசு)

**பூமிதேவி :** ஹா ! பாவி யாரடா நீ ? திடீரென்று என்னை கை தொட்டு இழுக்க வருகிறாய். நியாயமல்ல, தள்ளி தூர நில்.

**இரண்யாக்ஷன் :** வசுமதி ! நான் யாரென்பதாக நினைத்தாய்? நான் யாராயிருந்தாலுனக்கென்ன? இதோ பார் உன்னை இந்த அகாதமான சமுத்திரத்தில் அமிழ்த்தி விடுகிறேன்.

**பூமிதேவி.**

பாட்டு.

ஹரி ஹரி பரவாசு தேவா
அடியாளின் துயர் கெட
இது தருதி விரைவொடு வாராய் கண் பாராய்
இக்கோரம் சகியேன். (ஹரி

ஹிரண்யாக்ஷன் எனையே பிடித்தேகுறான்
என்ன செய்வேன் என தின்னல் தீர்ப்பாய் (ஹரி)
கருணைசெய்தே எனை காப்பதுன் பாரமே
கர்த்தா பரமபரிசுத்தா வாருமே. (ஹரி)

**பூமிதேவி :** இன்று ஏற்பட்ட சகுனம் சரியாக பலிதது விட்டதே. என் செய்வேன், எனக்கு கெதியார்.

சண்டாளா! விலகி நில். என்னைத் தொடாதே. ஆபத் பாந்தவா! அநாதரக்ஷகா! நாதா! என்செய்வேன்.

மஹாவிஷ்ணு வராகரூபியாய் ஹிரண்யாக்ஷனை சம்ஹரித்து பூகோளத்தை ஸ்தாபித்தல்.

7-ம் அங்கம் முற்றிற்று.

---

களம் 1 அங்கம் 8

நரசிம்மாவதாரம்.

**ஹிரண்யன் :** மந்திரி! குல விரோதியான நாராயணன், தான் இன்னாரென்று பிறர் அறியாதபடி கேவலம் நிக்ருஷ்டமான வராக ரூபத்தை எடுத்து என் சகோதரனை ஹிரண்யாக்ஷனை சம்ஹரித்து விட்டான். நேராக வந்திருந்தால் ஹிரண்யாக்ஷன் அவனை விட்டிருப்பானா? மகா கபடக்காரன். மாயாவி. அவனை சாமான்யத்தில் ஜெயிக்க முடியாதென்று எண்ணி கோரமான தவஞ்செய்து வேண்டிய வரங்களைப்பெற்று அவனைக் கொல்ல வழிதேடி வந்தேன். இன்னமும் எங்கும் தூதர்களை அனுப்பி, அந்த நாராயணனுக்கு ஆஸ்ரயமான தபஸ்விகளையும், பிராம்மணர்களையும், கோக்களையும் சம்ஹரிக்கும்படியும், தேவாலயங்களையும் துவம்சம் பண்ணும்படியும், உத்தரவு செய்திருக்கிறேன். மற்றும் ராஜ்ய தந்திரங்களை ஜாக்கிறதையாக பார்த்துக் கொள்ள வேண்டும்.

**மந்திரி :** அப்படித்தான் செய்யவேண்டும்.

ஹிரண்யன் : மந்திரி ! குருகுலவாசம்செய்யும் எனது குழந்தையையும், குருவையும் வரச்சொன்னேனே. வந்தார்களா ?

மந்திரி : வந்து விடுவார்கள். தூதன் சென்றிருக்கிறான்.

சுக்கிராச்சாரி பிரஹ்லாதனுடன் ப்ரவேசம்.

சுக்கிராச்சாரி: (தனக்குள்) மஹாராஜன் தமது குமாரன் பிரஹலாதனை வித்யாப்யாசார்த்தமாக என்னிடம் ஒப்புவித்திருக்கிறான். இந்த குழந்தையினுடைய புத்தியும், ஹரி பக்தியும் குணாதிசயங்களும, மிகவும் கொண்டாடத் தகுந்தவையாகவே இருக்கின்றன. இந்த குழந்தைக்கு நம்வாக்கினால் உத்தமமான வித்தைகளைகற்றுக்கொடுக்க நமக்கு பாக்யமில்லை. ஆனால் நான் கற்றுக்கொடுக்கும் அசுர வித்தைகளை ஒன்றுஞ் சொல்லாமல் சாக்ஷாத் ஸ்ரீமந்நாராயணனுடைய குணங்களையும் நாமங்களையுமே சொல்லுகிறான். அது நமக்கு சந்தோஷத்தை உண்டு பண்ணுகிறது. மஹாராஜன் குழந்தையையும், நம்மையும் அழைத்திருக்கிறான் சீக்கிரம் செல்வோம்.

பிரஹலாதன் : அப்பா ! நமஸ்காரம்.

ஹிரண்யன்: கல்யாணமஸ்து. வத்ஸா! நீ எப்போது பெரியவனாவாய் ! எப்போது சாஸ்திரப் பாடங்களைப் படிப்பாய்? எப்போது உன் அருமையான வாக்யங்களை என் காதுகள்குளிர கேட்போமென்று ஆவல் கொண்டிருந்தேன். தங்கமே ! உன்னை புத்திசாலி என்று எல்லோரும் சொல்லுகிறார்கள். நீ இதுவரையிலும் படித்ததில் ஸ்லாக்யமானது ஒன்று சொல் பார்ப்போம்.

பாட்டு

ராகம் : கனாநிதி. தாளம் : ஆதி.

பல்லவி

பிரஹலாதன் :

* சின்ன நாடேனு சைபட்டதிவே,

அனுபல்லவி

என்னரா நீவு டி கரஹைக பி காணி
எநதோ நின்னு பாலனமு சேதுன்னனு (சின்)

சரணம்

இடுவேளவிட நடுதாமனு
ஏலகுநதமானி எஞ்சினுவோ தெலிய
குட்டு ப்ரோவவே, கருணவாரிநிதி
கொப்ப தெய்வமா த்யாகராஜனுத (சின்)

ஹிரண்யன் . வத்ஸா ! என்ன சொன்னாய் ?
ஆச்சார்யா ! என குழந்தைக்கு அசுரநீதி சாஸ்திரங்களை சொல்லி வைப்பதாக அழைத்துக் கொண்டுபோய் அனர்த்தமான விரோதியின் பெயரை கற்பித்துக் கொடுத்திருக்கிறாய். கடகட! நீயும் பிராம்மணனா? பிராமமணனே யல்லாது யதார்த்த பிராம்மணனல்ல ?

சுக்கிராச்சாரி : மஹாப்ரபு ! நான் என்ன செய்வேன். நான சொல்லி வைக்கவுமில்லை. வேறொருவரும் சொல்லி வைக்கவுமில்லை. உங்கள் குழந்தை இப்படிச்சொல்லு கிறான். நாங்கள் என்ன செய்வோம்.

ஹிரண்யன் : வத்ஸா பிரஹலாதா! இனி இப்படிச் சொல்லாதே இது நல்ல படிப்பில்லை. நமது அரசகுலமார்க்கமான வித்தையைத் தான் படிக்கவேண்டும்.

பிரஹலாதன் : அப்பா ! எது நல்லபடிப்பென்று கவனித்தால்

விருத்தம்

† குலந்தரும் செல்வந்தந்திடும் அடியோர் படுந்துயராயின வெல்லாம்.

---

* த்யாகராஜக்ருதி † திருவாய்மொழி.

நிலந்தரஞ்செய்யும், நீள்விசும் பருளும் அருளொடு
பெரு நிலமளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்றதாயினு மாயின
செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

இதுதான் நல்ல படிப்பு. இதை எந்த லோகமும் சம்மதிக்கும்.

ஹிரண்யன் : பிரஹலாதா ! அசுரகுல விரோதியான அந்த பகைவனுடைய பெயரைச்சொல்லாதே. அந்தச் சண்டாளன் உன் சிற்றப்பனைக் கொன்ற மஹாபாவி. சகல தேவர்களும் என்னையே வணங்குகிறார்கள் என்பது உனக்கு தெரியாதா ? ஏன் வீணாக பிதுர்த்வேஷத்துக்குள்ளாகிறாய். வேண்டாம், நான் சொல்வதைக்கேள், அவன் பெயரைச் சொல்லாதே.

பிரஹலாதன் : ஐயா ! அந்த புருஷோத்தமன் ஒருவருக்கும் விரோதியல்ல. துஷ்டர்களை சம்ஹரிக்கக் கூடியவன். தேவர்கள் தங்களை வணங்குவது பயத்தினாலேயல்லாது பக்தியினாலில்லை. ஐயா ! நான் பிதுர் த்வேஷம்செய்ய வில்லை. ஜகத்பிதாவான நாராயணன் பெயர் சொல்லுவதால் க்ஷேமமுண்டு. இகபரசாதகமுண்டு.

ஹிரண்யன் : ஆஹா ! குல விரோதியைப் புகழும் இக்குடிலனை எவ்விதத்திலும் இம்சை செய்தாவது நம்வழியில் திருப்புகிறேன்.

ராகம்: ஆரபி. தாளம்: ஆதி.

பல்லவி

இனியேனும் எனது பெயர் இரணிய நமவென
உரை மனமகிழ்வாய்

அனுபல்லவி

முனி ஆதி அமரர் தினம் ஓதிடுமொழிதனை
நீ புகல்வதில் எனவோ கெடுமதி (இனி)

சரணம்

தந்தையாகுமேலுமித்தரணிக்கு ராஜன்
சகலலோகமும் புகழ் தழைக்கும் பிரகாசன்
சிந்தையில் முரணமர் செய்யும் பகைவர் நாசன்
தேவரும் தாள்பணிந்து சேவிக்கும் ஈசன்.

பிரஹலாதன்.

ராகம்: ஆரபி. தாளம்: ஆதி

பல்லவி

பரந்தாமனை அன்றி வரந்தான் தரும் தெய்வம்
இருந்தால் புகன்றிடுவேன்.

அனுபல்லவி

சிரந்தானொழியினும் உறந்தானழியினும்
பரந்தாருயிரையும் மறந்தேனென நீரும். (பர)

சரணம்

ஓங்கி வாளாயுதத்தினால் வெட்டினாலும்
உதிரமொழுக சிரசினில் குட்டினாலும்
தீங்குசெய்யும் விஷ ஜெந்துக்கள் கொட்டினாலும்
சித்ரவதைசெய்து தலைகீழாய் கட்டினாலும் (பர)

ஹிரண்யன்.

பகைவன் புகழைச் சொல்லி பணிவதை விடுத்து
பகரும் எனது சொல்லுக்குள் செவிகொடுத்து
மிகமனமகிழுடன் அருகினில் அடுத்து
விளங்குவாய் நல்லபிள்ளையென பெயர் எடுத்து (இனி)

பாட்டு.)

**பிரஹலாதன்.**

நதி பெருகினும் கடல் நிகராகாது
நக்ஷத்திர மின்னினும் மதி ஒளி ஏது
அதிமணமலரும தாமரையை ஒவ்வாது
ஹரிக்கு மேலான தெய்வம உரைக்கலாகாது.

**ஹிரண்யன்:** மந்திரி! இந்தப்பாவியை ராஜகுமாரன் என்று கொஞ்சமேனும் எண்ணுமல் பலவிதத்திலும் ஹிம்சை செய்து நம் வழியில் திருப்புங்கள்.

**மந்திரி:** மஹாப்ரபோ! பிரஹலாதனை அடித்தோம். அக்னியில் தள்ளினேம். சமுத்திரத்தில் அமிழ்த்தினேம். யானையின் காலினுல் இடறும்படியாகவும், பாம்புகளால் கடிக்கச் செய்யும்படியாகவும் உத்திரவு செய்தோம். என்ன உபத்திரவம் செய்தும் மரணம் ஏற்படவில்லை. தான் சொன்னதையே சொல்லிக் கொண்டிருக்கிறான்.

**ஹிரண்யன்:** ஆஹா! அப்படியா! அவன் தாயார், கயாதுவைக் கொண்டே அவனுக்கு விஷங்கொடுக்கச் செய்கிறேன். கயாது!

**கயாது:** நாதா.

**ஹிரண்யன்:** பிரகலாதனுக்கு விஷத்தைக் கொடு.

பாட்டு

ராகம்: கேதராம். பஜன சேயவே. தாளம்: ரூபகம்.

பல்லவி

சிறுவன் மீதிலே சினங்கொள்ளலாமா
முறையாமா இந்த (சிறு)

அனுபல்லவி

அருமை மைந்தன் விஷம்பருகியே
ஆருயிரிழந்திட துணிவுடன் (சிறு)

சரணம்

பெற்றவயிறு நோகலானேன்
பெருந்துயரினி சகிக்கிலேனே
சற்று கோபந்தணிந்தென் மீது
தயவுபுரிய வேணும் வாது (சிறு)

கயாது: (தனக்குள்) என்ன செய்வேன்; பர்த்தாவோ கொடூர சுபாவமுள்ளவராக இருக்கிறார். ஏது செய்வது. பகவானிருக்கிறார். பிரஹலாதா! வா இங்கே உன் பிதா உனக்கு விஷம் கொடுக்கும்படி ஆக்ஞாபித்திருக்கிறாரடா.

பிரஹலாதன்: மாதா! அப்படியே செய்யலாம்.

ஹிரண்யன்: (தனக்குள்) என்ன ஆச்சர்யம்! எவ்வித உபாயங்களைச் செய்தும், பிரஹலாதன் சாகவேயில்லை. என்ன காரணம். அவனையே கேட்போம். பிரஹலாதா நீ ஹரியென்றும் நாராயணனென்றும் பிதற்றுகிறாயே அவன் எங்கே இருக்கிறான். உன் சிறிய தகப்பனைக் கொன்ற போதே அவனை பல இடங்களிலும் தேடினேன். எங்கேயோ மறைந்துவிட்டான். காணேும். நாராயணனே உலகிலில்லை. அப்படி இருந்தால்,

ராகம்: இந்துஸ்தான் தோடி (கபரதரஹாத்)

பல்லவி

எங்கிருக்கிறான் நீ ஏற்றிப் போற்றி சொல்லும் ஹரி (எங்)
என் குலத்துக்குப் பகைவன் என்றிருக்கும்
அந்தப்பயல் (எங்)

அனுபல்லவி

தங்கியவனிருக்கும் இடங்களை நாடி
சதுரங்கசேனைகள் போய் காணாமல் வாடி

இங்கு வந்தனர் நானும் இதுவரை தேடி
இருக்கிறேன் வதைப்பதற்கென அஞ்சி ஒளிந்தோடி (எங்)

பிரஹலாதன் :

எங்குமிருப்பான அவன் இல்லாத
இடம் வேறில்லை. (எங்)

இந்த உலகம் சாகரம் அந்தரம் பாதாள
லோகம். (எங்)

சரணம்

சங்கை உமக்கு வேண்டாம் சர்வா திகாரம்
தமக்கென்றிங்கே காட்டுவான் தன்னவதாரம்
பொங்கும் அவன் புகழை புகல அபாரம்
போதித்தேன் சந்தேகமானால் சோதித்து பாரு
மினனேரம் (இங்)

ஹிரண்யன்.

பாட்டு

இங்கிருப்பானு எங்குலத்துக்குப் பகைவன் (இங்)
நீ ஈசனென்று ஓதுகிற நாசகாலனான மாயன் (இங்)

பிரஹலாதன்.

இங்கிருக்கிறார் எங்கினும் நிறைந்த மாயன்
ஏனிதற்கு வம்பும் தும்பும் என் மொழியை
நம்பும் நம்பும். (இங்)

ஹிரண்யன் :

இந்த கம்பத்திலவன் இல்லையே யின்று
எதிர்த்து யானையை சிங்கம் கொல்லல்போல் கொன்று
சிந்தும் ரத்தம் குடித்துன் தசையையும் தின்று
திக்கெட்டுப் புகழ் பரப்ப சித்தத்தில் நினைத்தே னின்று
காட்டுவாயடா

நீ கை குவித்த தெய்வமெங்கே
கம்பத்துக்குள் நின்றானென்று கும்பிட்டுச்
சொன்னாயே இன்று காட்டுவாயடா

பிரஹலாதன்.

தொட்ட தொட்ட இடமெல்லாம் தோன்றுவானுமக்கு
சொற்பமேனும் சந்தேகம் வேண்டாமே இதற்கு
அட்டிநேர்ந்தால் நானே என்னுயிரை மாய்ப்பதற்கு
அஞ்சுகிலேன் அந்த மாயன் வந்து தோன்றுவான் முன்னுக்கு
நிச்சயமிது நீர் சந்தேகம் கொள்ளவேண்டாம்.
நேரவன் வராது போனால் நானே என்னுயிரை மாய்ப்பேன்.

(வ ட) இங்கிருப்பான் அங்கிருப்பான் என்று சந்தேகமில்லை. ஹரி எங்குமிருப்பான், பக்தியுடன் கவனித்தால் பார்க்கலாம்.

ஸ்ரீமந்நாராயணன் நரஸிம்ஹ மூர்த்தியாகத்தோன்றி
ஹிரண்யனை சம்ஹரித்தல்.
எட்டாம் அங்கம் முற்றிற்று.

---

## களம் 1. அங்கம் 9.

## வாமனாவதாரம்.

**தேவேந்திரன்:** ஸத்குரு! இந்த தேவலோகாதிபத்யம் பெற்றேன் என்ற ஒரு பெருமையே யல்லாது இந்த பதவியில் நானடையவும் துன்பம் அளவிட முடியாது.

**பிரஹஸ்பதி:** இந்திரா! உலகத்தில் எந்தப் பிராணியும் முழுவதும் சுகமே யடைகிறன் என்றும் அல்லது

முழுவதும், துக்கமே அடைகிறான் என்றும் ஒரு நிச்சயமில்லை. சுக துக்கங்கள் வண்டிச்சக்கரம்போல் சுற்றிக்கொண்டேதானிருக்கும்.

இந்திரன்: குருநாதா! காமதேனு, கற்பகவிருக்ஷம், அப்சரஸ்கள், சிந்தாமணி என்னும் பரம சம்பத்துக்களையும் அடைந்து ஏதோ கொஞ்சம் சுகமடைந்தோம் என்று நினைத்திருக்குந் தருணத்தில் அடிக்கடி கஷ்டங்கள் சம்பவிக்கிறதே ; நாம் என்ன செய்வோம்.

நாரதர்: இந்திராதி தேவர்களுக்கு அடிக்கடி சம்பவிக்கும் துயரங்களை தேவாதிதேவனான புருஷோத்தமன் நிவர்த்தி செய்து வருகிறார். இப்போது உனக்கென்ன விசாரம். ஏன் கவலைப்படுகிறாய்.

இந்திரன்: ஸ்வாமின்! அசுரவர்க்கங்களை நிக்ரஹித்து, நம்மவர்க்கு அனுகூலஞ்செய்து கிருபை செய்த ஜகதீசன் பிரஹலாதனுக்கு வரமளிக்குந் தருணத்தில் அவனுடைய குலத்தில் பிறந்தவர்களை சம்ஹரிப்பதில்லையென்று வாக்குதத்தம் செய்துவிட்டார்.

நாரதர்: அதனாலுனக்கென்ன குறை.

இந்திரன்: ஸ்வாமின்! அந்தப் பிரஹலாதனுடைய பேரனான பலிச்சக்ரவர்த்தி உக்ரமான தவஞ்செய்து வருகிறான்.

நாரதர்: அதனாலுனக்கென்ன அபாயம்.

இந்திரன்: அவன் இந்த இந்திர பதவியைக்குறித்தே தவம் செய்கிறான். ஆகையால் எனக்கு பீதி யுண்டாகிறது.

பிரஹஸ்பதி: என்ன தவம் செய்தாலென்ன. நூறு அஸ்வமேதம் செய்தாலல்லவோ இந்திரபதவி கிடைக்கும்.

நாரதர்: அவனப்படி செய்யாமலிருக்கும்படி தந்திரஞ்செய்ய வேண்டும்.

இந்திரன்: நாரத குரோ! அவன் அசுரனுக இருந்தும் சாத்விக பிரகிருதியாகவே யாகங்களை செய்கிறபடியால் ஒரு விதத்திலும் அதற்கு இடையூறு செய்ய முடியாது.

நாரதர்: அதற்குஞ் சரியான தந்திரமுண்டு.

இந்திரன்: அதென்ன தந்திரம்.

நாரதர்: எல்லாம் உன்னிடத்திலேயே இருக்க அது தெரியாமல் நீ தயங்குகிறுய்.

இந்திரன்: விபரமாய் சொல்லவேண்டும்.

நாரதர்: புரந்தரா! உனது கனிஷ்ட சகோதரனுன உபேந்திர பகவானை, நீ கேவலம் சகோதரனென்றெண்ணியிருக்கிறுய். அவர் பெருமை எங்களுக்குத் தெரியும்.

இந்திரன்: சொல்லுங்கள்! சொல்லுங்கள்!

நாரதர்: உன் தாயார் அதிதியம்மாள் செய்த தவப்பயனுல் ஸ்ரீமந் நாராயணனே புத்திரனுக அவதரித்திருக்கிறுர்.

இந்திரன்: பாக்யம்! பாக்யம்!

நாரதர்: அவர் குட்டையாக இருப்பதால் உனது பிதா அவருக்கு வாமனனென்று நாமகரணஞ் செய்தார். அவர் இப்போது பூதலத்தில் ஸ்தாணு ஆஸ்ரமத்தில் தவஞ் செய்துகொண்டிருக்கிறுர். நீ அவரிடம் சென்று பலிச் சக்ரவர்த்தியால் உனக்கு ஏற்பட்டிருக்கும் பயத்தை நிவாரணம் செய்துகொள்ளலாம். ஸ்தாணு ஆஸ்ரமத்திற்குச் செல்லலாம்.

## ஸ்தாணு ஆஸ்ரமம்.

**இந்திரன்:** சமயம் எப்படியோ. கவனித்தல்லவோ செல்ல வேண்டும்.

**பிரஹஸ்பதி:** நல்லது கவனிப்போம்.

**வாமனர்:** யாரங்கே ?

**பிரஹஸ்பதி:** நமஸ்கரோமி.

**வாமனர்:** குரோ! தாங்கள் எங்களுக்கு குருவாக இருந்தும் இப்படி நமஸ்கரிப்பது நியாயமாகுமா?

**பிரஹஸ்பதி:** வாமனரே! தாங்கள் காஸ்யபருடைய புத்திர ரென்று எண்ணுகிறவர்களுக்குத் தாங்கள் சொல்வது உசிதமே. நாரதருடைய உபதேசத்தால் தாங்கள் இன்னாரென்றும், தங்களுடைய ஸ்வரூபஸ்வபாவங்கள் இவ்விதமென்றும் தெரிந்து கொண்டவர்கள் ஏன் தங்களை நமஸ்கரிக்கமாட்டார்கள்.

**வாமனர்:** ஆனால் இங்கு வந்த காரியம் யாது?

**பிரஹஸ்பதி:** பலிச்சக்ரவர்த்தி எக்ஞம் செய்து கொண்டிருக்கிறார்.

**வாமனர்:** அதனாலென்ன.

**பிரஹஸ்பதி:** அந்த எக்ஞம் சம்பூர்த்தியானால் இந்த இந்திரன் பதவி இழக்கவரும். இழக்கலாமா?

**வாமனர்:** அதற்கு நான் என்ன செய்வது.

**பிரஹஸ்பதி:** இந்திரன் பதவிக்கு குறைவு வாராமல் ரக்ஷிக்க வேண்டும்.

**வாமனர்:** பலிச்சக்ரவர்த்தியின் எக்ஞத்தை பங்கப்படுத்துவது நியாயமாகுமா?

பிரஹஸ்பதி: இந்திரனுக்கும், பதவி தக்கவேண்டும். பலிச் சக்கிரவர்த்திக்கும் அனுக்ரஹம் செய்ததாக ஆக வேண்டும்.

வாமனர்: அப்படியே ஆகும். செல்லலாம்.

ராகம்-குந்தளவராளி. செந்தனேசதா. தாளம்-ஆதி

பல்லவி

தர்மமே ஜெயம் தரும் நிச்சயம. (தரும)

அநுபல்லவி

நிர்மலாகர மௌன ஞானியோர்
நித்தம் போற்றிடும் ஸத்துவமாகிய (தரும)

சரணம்

நிகிலாதாரமாய் நினைக்கும் பரமாய்
புகல் மா முனிவோர் புகழுந்தரமாய்
சுககாரணமாய் சுகிர்த பூரணமாய்
நிகழ் மகத்துவமாய் நேரும் சத்யமாய். (தரும)

மஹாபலி: ஆசார்யசிகாமணீ! தங்களுடைய அனுக்ரஹத்தினுல் இந்த யாகம் சரிவர நடந்து விட்டது.

சுக்ராச்சாரி: சக்ரவர்த்தி! யாகம் பூராவும் சம்பூர்த்தியாகட்டும். இன்னும் எக்ஞ சேஷமாக வில்லையே.

மஹாபலி: அதுவுமென்ன—சொல்ப காரியந்தானே நடக்கிறது.

சுக்ராச்சாரி: அதுதான் பெரிய காரியம்.

மஹாபலி: என்ன நடக்கவேண்டியது.

சுக்ராச்சாரி: இதுதான் மத்ய சவனம், தக்ஷிணை கொடுக்க வேண்டிய சமயம். தக்ஷிணை சமக்கிரமமாக கொடுத்த பிறகு தான் எக்ஞ சேஷம் நடத்தப்படும்.

மஹாபலி : அப்படியே செய்வோம்.

வாமனர் : ஸ்ரீஹரி! ஜனார்த்தனா! வாசுதேவா!

மஹாபலி : வாசலில் என்ன தொனி கேட்கிறது. யாரென்று பாருங்கள்.

சுக்ராச்சாரி : யாரோ அதிதியின் தொனிபோல் இருக்கிறது.

மஹாபலி : வரட்டும் அதிதிகள்.

ஆசார்யா! வருகிற பிரமச்சாரியை பார்த்தீர்களா? என்ன பிரம்ம தேஜஸ்; என்ன வேதோச்சாரணம். இவர் என்ன—சூர்யனோ அல்லது அக்னிபகவானோ பிராம்மணோத்தமா! நமஸ்காரம்.

வாமனர் : சக்ரவர்த்தி! எக்ஞம் மிகவும் சிலாக்கியமாகவே நடத்தப்படுகிறதென்று கேள்விப்பட்டு இங்கு வந்

மஹாபலி : தாங்கள் வந்தது எனது பாக்யம். என் பெரியோர்கள் செய்த பூஜாபலம், தன்யோஸ்மி; தன்யோஸ்மி.

வாமனர் : எக்ஞ மத்தியில் தக்ஷிணை கொடுக்கிற சமயமிதல்லவா? தக்ஷிணை கொடுத்தாய்விட்டதா?

மஹாபலி : கொடுத்துக்கொண்டிருக்கிறோம்.

வாமனர் : ரித்விக்குகளுக்கு தக்ஷிணை கொடுத்தாயிற்றா?

மஹாபலி : கொடுத்தாயிற்று.

வாமனர் : வந்த அதிதிகளுக்கு தக்ஷிணை கொடுக்கும் சமயமிதல்லவா.

மஹாபலி : இதோ கொடுக்கிறோம்.

சுக்ராச்சாரி : ஓஹோ! இவரென்ன வாயாடி பிரம்மசாரியாக வல்லவோ இருக்கிறார். என்ன கேட்பாரோ என்னமோ தெரியவில்லை.

வாமனர் : நாம் இருந்து ஜெபம் செய்ய வேண்டியதற்கு—

சுக்ராச்சாரி : என்ன ஏதாவது கம்பளாசனம் வேண்டுமா ?

வாமனர் : என் சொந்தமாய் பராதீன மில்லாமல் எனது காலால் மூன்றடி இடம் கொடுக்கவேண்டும்.

மஹாபலி : அப்படியே கொடுக்கிறேன்.

வாமனர் : தத்தம் செய்.

சுக்ராச்சாரி :

ஸர்வஸஸ்யா ஸ்ரயா பூமி
வராஹேண ஸமுத்ருதா
தஸ்மாத்தஸ்ய ப்ரதானேன
அதஸ்ஸாந்திம் ப்ரயச்சமே.

சுக்ராச்சாரி : மஹாராஜா ! நிறுத்தும், நிறுத்தும் தானத்தை. மோசம், வந்திருப்பவன் கபட பிரம்மச்சாரி, மாயாவி.

மஹாபலி : ராக்ஷசனா ! அரசனா ! பிசாசனா !

சுக்ராச்சாரி : அல்ல, அல்ல, ஆதி நாராயணன்.

மஹாபலி : என்ன ? யார் ?

சுக்ராச்சாரி : ஸ்ரீமந் நாராயணன் ஏதோ கபடமாக இந்த பிரம்மச்சாரி வேடம்பூண்டு வந்திருக்கிறார். ஏதோ விபரீதம் வரும்போலிருக்கிறது. முன்பே தெரிவித்தேன்.

மஹாபலி : ஆசார்ய ! என்ன சொன்னீர்கள். ஆஹா! எனது பாக்யமே பாக்யம். எந்தப்பிராம்மணன் கையில் தானம் செய்தாலும்,நாராயணார்ப்பணம், வாசுதேவார்ப்பணம், என்று சாத்விகத்யாகம் செய்யவேண்டுமோ அப்படிப் பட்ட ஸ்ரீமந் நாராயணனே எனது எக்ஞ பூமிக்கு வந்து தேஹி என்று யாசித்தால் ஏன் நாம் கொடாமல் இருக்கவேண்டும். அவசியம் கொடுக்கவே கொடுப் பேன்.

சுக்ராச்சாரி : மஹாராஜனே ! ஏதோ கபடமாக இருக்கிறது ; கவனித்தேன். இந்த பிரம்மச்சாரி, பிரம்மச்சாரி அல்ல. பிர்ம்மமே தேவர்களின தூண்டுகலின்பேரில் கபடமாய் இந்த பிரம்மச்சாரி வேடம் பூண்டு வநதிருக்கிறார்.

மஹாபலி : ஸ்வாமி ! தங்களுக்கு எப்படி தெரிந்தது ?

சுக்ராச்சாரி : மஹாராஜா ! இநத ஆதி நாராயணன் எந்த வேடம் பூண்டாலும் வக்ஷஸ்தலத்தில் அனபாயினியாய் வசிகதும லக்ஷ்மிதேவி இவனைவிட்டு பிரியமாட்டாள். அநத ரகசியம் எங்கு தெரிநதுவிடுமோ என்று எண்ணி அடிக்கடி வஸ்திரததால் வக்ஷஸ்தலத்தை மறைநதுக் கொள்ளுகிறார். கண்டேன அநத மர்மத்தை

மஹாபலி : அப்படியா ? தன்யோஸ்மி. கிருதார்த்யோஸ்மி. மிக சநதோஷம், எக்ஞ ஸ்வரூபியாகவும, எக்ஞ சரீரியாகவும, எக்ஞ கர்த்தாவாகவும், எக்ஞ ஆத்மாவாகவும், எக்ஞ பலப்ரதானனுகவும், இருக்கும இநத புருஷோத்தமன் பிரத்யக்ஷமாக எனது எக்ஞபூமிக்கு வநது யாசிப்பதால் எனது பாக்பமே பாக்யம். மூன்றடி இடமே யல்லாது எதைக்கேட்டாலும் கொடுக்க சஜ்ஜனுகவே இருக்கிறேன். தடைசெய்ய வேண்டாம குரோ.

சுக்ராச்சாரி : என்ன விபரீதம்! அசுரனுக்கு இந்த நல்ல புத்தி உண்டானது ஆச்சர்யநதான. ஆனல் முன்பு கொடுத்துவிட்டுப் பின்பு ஏற்படும் சங்கடங்கண்டு வருத்தப்படுவான். இன்னமும வேறுவித உபாயத்

தாலும் தடை செய்வோம். இவன் பாரியை விடுகிற தான ஜலத்தை வண்டு ரூபமாய் கிண்டியின் துவாரத்தை அடைப்போம்.

மாஹாபலி: ப்ரியே! தானம் செய்வோம். தீர்த்தம் விடு.

விந்திபாவளி: நாதா! ஜலம் விழவில்லை, கிண்டியின் த்வாரம் அடைத்திருக்கிறது.

சுக்கிராச்சாரி: ஹா-ஹா! கண்போயிற்று; கண்போயிற்று; நாராயணு, நாராயணு, நாராயணு.

வாமனர்: தைத்ய குரோ! வேண்டும்; சாத்வீக பாவத்துடன் தானம் செய்யும் எஜமானனை தடைசெய்பவர்களுக்கு இதுதான் தண்டனை.

சுக்கிராச்சாரி: தானம் நடக்கட்டும்; தானம் நடக்கட்டும்.

மஹாபலி: பகவன்! பிராம்மணோத்தமா! தானம் செய்து விட்டேன்; இஷ்டப்படி தங்கள் காலால் மூன்றடி இடம் அளந்துக் கொள்ளுங்கள்.

## வாமனர் திருவிக்ரமவதாரம் எடுத்தல்.

வாமனர்: சக்கிரவர்த்தி! பூமியையும், ஆகாயத்தையும் முழுமையும் இரண்டடியாக அளந்து விட்டேன்; மூன்றுவதடிக்கு இடமெங்கே?

மஹாபலி: ஜகதீஸா! எனது சிரசுதான் மூன்றுவதடிக்கு இடம். அனுக்ரஹம் செய்யுங்கள்.

வாமனர்: சக்கிரவர்த்தி! மூன்றடிகளும் அளந்தாய்விட்டது.

மஹாபலி: சர்வேஸ்வரா! தங்களுடைய சரணாரவிந்தம் என்னுடைய சிரசில் வைக்க நான் என்ன பாக்யம் செய்

தேனோ? என் முன்னோர்கள் செய்த பூஜாபலன்தானோ? என்னுடைய எக்ஞம் சம்பூர்ணமாக அனுக்ரஹிக்க வேண்டும்.

வாமனர் : எதற்காக எக்ஞம் செய்வித்தது ?

மஹாபலி : தங்களுடைய திருப்திக்காக.

வாமனர்: நானே திருப்தியடைந்தேன். நிறுத்து எக்ஞத்தை. சம்பூர்ண பலத்தை கொடுத்தேன். நீ இந்த கல்பமுழுதும் சிரஞ்சீவியாக பாதாள லோகத்திலிருந்து அடுத்த கல்பத்தில் தேவேந்திர ஸ்தானத்தை பெறுவாயாக.

9-வது அங்கம் முற்றிற்று.

---

களம் 2. அங்கம் 1.

ரேணுகையும் சகியும் பிரவேசித்தல்.

பரசுராமவதாரம்.

ரேணுகா : சகி ! இந்த புண்ய நதியில் ஸ்நானம் செய்வோம், வா.

சகி : சகி ! தீர்த்தத்தின் தெளிவைப் பார்த்தாயா. சஜ்ஜனங்களுடைய மனசுபோல் நிர்மலமாக இருக்கிறது. புத்ராலிங்கனம்போல் சீதளமாயிருக்கிறது. குழந்தைகளின் மழலைச் சொல்போல் மதுரமாயுமிருக்கிறது.

ரேணுகா : சகி! இது ஒரு விசேஷமல்ல. பின்னுமிந்த தீர்த்தத்தின் பெருமையைப்பற்றி விசேஷமாய் என்பர்த்தா பேசியிருக்கிறார். சகல பாபங்களையும் போக்கக்கூடிய புண்ணிய நதி யிது. சீக்கிரம் ஜலம் எடுத்துக்கொண்டு ஆஸ்ரமத்திற்குச் செல்வோம்

ரேணுகா : சகி ! என்ன ஆச்சர்யம் ! நானும் தினந்தோறும் ஸ்நானம் செய்தவுடன் வர்த்துளமாக ஜலத்தில் ஒரு கோடிழுப்பேன். அது ஒரு கலசமாக அமையும், தீர்த்த மெடுத்துக்கொண்டு போவது வழக்கம்.

சகி : ஆமாம். நானும் பலதடவைப் பார்த்திருக்கிறேன்.

ரேணுகா : ஐயோ ! என்ன பாபமோ ! என்ன சாபமோ ! என்ன காரணமோ கலசமமையவில்லையே? என்னசெய்வேன். பர்த்தாவின் அக்னிஹோத்ராதி அனுஷ்டானத்திற்கு, இவ்விதம் தீர்த்தம் கொண்டு போகாவிட்டால் ஐயோ ! அபசாரம் சேர்ந்துவிடுமே. என்ன செய்வேன்.

சகி : ஆஸ்ரமத்திலிருந்து வேறு கலசங் கொண்டுவந்து தீர்த்தங்கொண்டு போகலாமே.

ரேணுகா : அவ்விதம் தீர்த்தங்கொண்டுபோனல் என் பர்த்தா ஒப்புக்கொள்ளமாட்டார் ! இனி நாமென்ன செய்வது. அவரவர் கர்ம விதிப்படிதானே நடக்கும். ஆஸ்ரமம் செல்வோம் வா.

சகி : வலது கண் துடிக்கிறது. மனதில் நடுக்கம் தோன்றுகிறது. ஐயோ ! இதோ பார். நாகசர்ப்பம் குறுக்கே ஓடுகிறது. கஷ்டம் என்ன செய்வேன். என்ன ஆபத்து சம்பவிக்குமோ ? ஈஸ்வர சங்கல்பம் எப்படி ஆகுமோ?

இந்துஸ்தான் : ராஜஸபாடவரி: தாளம் : தேசாதி.

பாட்டு

ஏது நான் செய்குவேனே, ஜெகதீசனே (ஏது)
தீதென்ன சேருமோ, தெரிகிலேன் நானே
தியங்கி வாடிடலானேனே தேவதேவனே (ஏது)
அடியாள் செய் பாபமோ யாரிட்ட சாபமோ
ஐயோ துயரால் நொந்தேனே மெலிந்தேனே. (ஏது)

ஜமதக்னி : சிஷ்யா.

சிஷ்யன் : சத்குரோ.

ஜமதக்னி : என்ன ஸ்நானார்த்தமாய் சென்ற ரேணுகை இன்னும் வரக்காணோம். அனுஷ்டான சமயம் அதிக்ரம மாகிறது. பார்த்துவா.

சிஷ்யன்: ஸ்வாமி! இதோ வருகிறார்கள். வந்து விட்டார்கள்.

ஜமதக்னி : எங்கே அனுஷ்டானத்திற்கு தீர்த்தம் ?

ரேணுகா : ஸ்வாமி! வழக்கப்பிரகாரம் ஜலத்தில் வர்துளமாக கோடு கிழித்தேன். கலசம் அமையவில்லை. என்ன செய்வேன்.

ஜமதக்னி : பாபி ! என்ன அதிக்ரமம் சம்பவித்தது.

ரேணுகா : ஒன்றுமில்லையே.

ஜமதக்னி : அடி சண்டாளி! அறிந்தேன் காரணத்தை. அடீ! ஆகாயத்தில் சஞ்சரித்த ஒரு திவ்ய புருஷ னுடைய சாயை நதி ஜலத்தில் ப்ரதிபலிக்க அந்த சாயையைப் பார்த்து இப்படியும் ரூபவந்தனான ஒரு புருஷன் உண்டோ என்று உன் மனதில் நினைத்தாய்.

ரேணுகா : இது பாபமோ ?

ஜமதக்னி: அடி தூர்த்தே! இந்த மானஸாபசாரத்தால் உன் பதிவிரதா தர்மத்திற்கு குறைவு சம்பவித்தது. ஏன் இப்படி மானஸாபசாரம் செய்யவேண்டும். சீ! சீ! என் எதிரில் நில்லாதே. சிஷ்யா அழைத்துவா பரசுராமனை.

பரசுராமன் : ஏது—(தனக்குள்) இச்சமயம் நமது பிதா கோபத்துடன் அழைக்கிறார். என்ன ஆக்ஞை செய் வாரோ தெரியவில்லை. ஏதாக இருந்தாலும், பிதுர்

# தசாவதாரம்

ஓர் தமிழ் நாடகம்.



நான்காம் பதிப்பு.

வி. கன்னையா கம்பெனியாரால்

பிரசுரிக்கப்பட்டது.

1930

அசல் வெள்ளிக்கும் பவுன் பொன்னுக்கும் உத்தரவாதம்.

## வெள்ளி மெடல்கள்.


No. 141.
ரூ. 2-0-0.


No. 142.
ரூ. 2-4-0.


No. 144.
ரூ. 2-8-0.


No. 148
ரூ. 3-8-0.


No. 150.
ரூ. 3-0-0.


No. 154.
ரூ. 2-8-0.

அசல் வெள்ளிக்கும் பவுன் பொன்னுக்கும்

## தேத்தண்ணீர் சாமான்கள்.

இச்சாமான்கள் மெஷீனால் செய்யப்பட்டவை. ரம்யமானவை. விருந்தாளிகளுககு இவைகளில் காப்பியோ, டீயோ கொடுகக ஏற்றவை. பால், சாக்கரை, கஷாயம் வைத்துக்கொள்ள 3 உருப்படிகள். அழகிய கைப்பிடி. தட்டு ஒன்று வேண்டில் பிரத்யேகமாக கொடுக்கப்படும்.



No. 176. மூன்று உருப்படிக்கும் விலை ரூபாய் 90.

வாக்ய பரிபாலனமே நமக்கு முக்யமான தர்மம். (ஜமதக்னியைப் பார்த்து) பிதா ! நமஸ்காரம்.

ஜமதக்னி : வத்ஸா ! சிரஞ்சீவ ! சிரஞ்சீவ ! இந்த பாபி ரேணுகையை உன் பரசுதாரைக்கு இறையாக்கிவிடு. காரணங் கேட்காதே.

பரசுராமன் : ஆக்ஞைப்படி.

பரசுராமன் : பிதா தங்களது ஆக்ஞாப்ரகாரமே என் தாயை சிரச சேதம் செய்து விட்டேன்.

ஜமதக்னி : வத்ஸா ! சந்தோஷம். பிதாவின் வாக்ய கௌரவத்தால் மாதாவென்றும் எண்ணாமல் சம்ஹாரித்து வந்த உன்னுடைய பக்திக்கு மெச்சினேன். மெச்சினேன். வேண்டிய வரத்தைக் கேள் தருகிறேன்.

பரசுராமன் : ஸ்வாமி ! கொடுப்பது வரமானால் என் தாயார் உயிருடன் எழுந்திருக்க வரங் கொடுக்கவேண்டும்.

ஜமதக்னி : வத்ஸா ! ததாஸ்து. சிரசையும் கபந்தத்தையும், ஒன்றாக சந்தானம செய்து உயிருடன் வாழ்ந்தாயை அடைவாயாக, ஆனல் அவள் என் சந்நதிக்கு யோக்ய மாக மாட்டாள்.

பரசுராமன் : என்ன செய்வேன் ! விதியின் செயலே செயல். பிதாவின் உத்திரவுபடி மாதாவைக் கொலை செய்தேன். ஏதோ மாதாவை உயிருடன் பெறலாமென்று வரங் கேட்டேன். பிதாவும் வரங்கொடுத்தார். அவ்விதம் நான் சிரசைச் சேர்த்தும் என்ன செய்யலாம், கஷ்டகாலம். மாதாவின் உடலில்லாமல் ஒரு சண்டாளியின் உடலாக மாறிவிட்டது. என்ன செய்வேன்.

ரேணுகா: குழந்தாய்! பரசுராமா! நீ மனவருத்தப்படாதே. அவரவர் செய்த கர்மவினையின்படி தானே நடக்கும். நான் ரேணுகை எனும் தேவதையாக விளங்குகிறேன்.

பரசுராமன்: நமஸ்காரம். நமஸ்காரம். இப்படியாயிற்று. நமது கெதி.

களம் 2. அங்கம் 2.

நாரதர்: உலக வியாபாரம் நானாவிதம். பரசுராமன் தீர்த்த யாத்திரை சென்றான். இந்த தருணத்தில் கார்த்தவீரியன் என்பவன் ஆஸ்ரமத்திலிருந்த ஜமதக்னியை சம்ஹரித்து விட்டான். இதை பரசுராமனிடம் சொல்லி கார்த்தவீரியனுடைய கர்வத்தை பங்கம் செய்து விட்டேன்.

பரசுராமன்: நாரதருடைய வாக்யத்தாலே என் பிதாவை கார்த்தவீரியன் கொன்றான் என்ற கோபத்தாலே கார்த்தவீரியனையும் கொன்று இருபத்தொருஆவர்த்தி க்ஷத்திரிய பூண்டு இல்லாமல் சின்ன பின்னமாக்கி, க்ஷத்ரியர்களுடைய ரத்தப் பிரவாகத்தினால், ஒரு தடாகமுண்டாக்கி, அந்தரத்தத்தினாலேயே என் பிதாவுக்கு பிரதர்ப்பணம் செய்தேன். ஆயினும் கணக்கிலடங்காத ஹிம்சைகளை செய்த பாவம் தொலைவதற்காக பெரிய யாகத்தையும் செய்து முடித்தேன். இந்த எக்ஞத்தின் சாங்கபலம் சித்திக்கவேண்டி, அபிஷ்டதானம் செய்ய எண்ணங்கொண்டேன். யார் எதைக் கேட்டாலும் கொடுக்க சஜ்ஜனாக இருக்கிறேன்.

பரசுராமன்: வரவேண்டும். வரவேண்டும், பரசுராமன் நமஸ்கரிக்கிறேன்.

காசிபர் பிரவேசம்.

காசிபர்: ராமா! சர்வாபீஷ்டசித்திரஸ்து. எக்ஞம் முடிந்ததா?

பரசுராமன்: மஹான்களுடைய க்ருபையால் யாகம் சமாப்தியாயிற்று. அதற்கு அங்கமாக செய்யவேண்டிய அபீஷ்டதானந்தான் செய்யவேண்டும்.

காசிபர்: நான் ஒரு அபீஷ்டம் கேட்கிறேன்.

பரசுராமன்: ஆஹா! கேட்கலாம்.

காசிபர்: க்ஷத்திரியர்களை பூராவாக சம்ஹரித்தபடியால், இப்போது பூமி எல்லாவற்றிற்கும் நீயே எஜமானனாக இருக்கிறாய்.

பரசுராமன்: பெரியவர்களுடைய ஆசீர்வாதமே.

காசிபர்: ஆகையால் பூமி பூராவும் நீ தானஞ்செய்து சர்வ பூமண்டல தானபலன் பெறுவாயாக.

பரசுராமன்: சந்தோஷம்! அப்படியே தானம் செய்து விட்டேன். பெற்றுக்கொள்ளுங்கள்.

காசிபர்: பெற்றுக்கொண்டேன்.

பரசுராமன்: நமஸ்கரிக்கின்றேன்.

காசிபர்: பரசுராமா! பூமி யாருடையது?

பரசுராமன்: தங்களுடையது தான், சந்தேகமென்ன?

காசிபர்: என் பூமியில் வாசம் செய்யக்கூடாது. செல்லலாம் வேறிடம்!

பரசுராமன்: ஸ்வாமி! என் தபத்தின் பலத்தால் மேல் சமுத்திரத்தில் ஸ்தலம் கல்பித்துக்கொண்டு அங்கே வாசம் செய்கிறேன். புண்ய க்ஷேத்திரங்களின் தரிசனத்திற்காக மட்டும் எனக்கு உத்தரவு கொடுக்கவேண்டும்.

காசிபர்: ராமா! நீ புண்ய க்ஷேத்திர தரிசனார்த்தமாக இங்கு வந்தாலும், இராத்திரி இங்கு தங்கி வாசம் செய்யக் கூடாது.

பரசுராமன் : சரி.

காசிபர் : இப்படிச் செய்யாது போனால் இந்த பரசுராமன் இன்னும் க்ஷத்திரியர்களுக்கு உபத்திரவம் செய்தாலும் செய்வான். இதுவே சரி. தபோவனம் செல்வோம்.

நாரதர் : அதிருக்கட்டும் பரசுராமா, உம்மைப்பார்த்து சில நாட்களாயிற்று.

பரசுராமன் : வாஸ்தவம், எனக்கும் இத்தேசத்தில் ராத்திரி வாசம் கூடாதென்று ஆய்விட்டது. தங்களைப்போன்ற மஹான்களுடைய தரிசனம் கிடைப்பது அரிதாய் விட்டது.

நாரதர் : பரசுராமா ! என்ன கையிலெடுத்த கார்முகம் இன்னும் பரித்யாகம் ஆகவில்லை போலிருக்கிறது. எத்தனை காலம் இந்த வீர விரதம். பிராமணனுக்கு அழகல்லவே. இந்த பிடிவாதத்தை விட்டுவிடு. தபசு செய்து பிரம்ம நிஷ்டையிலிருந்துவா.

பரசுராமன் : ஸ்வாமி ! இந்த கார்முகம் ஸ்ரீமந் நாராயணனுடைய கார்முகம். இதை அவரிடம் ஒப்புவித்து விட்டு தங்கள் வாக்யப்படி அநுஷ்டிப்பேனாக.

நாரதர் : பரசுராமா ! இந்த தனுசுக்கு எஜமானனான ஸ்ரீமந் நாராயணன் அயோத்யா நகரத்தில் தசரத சக்கிரவர்த்தித் திருக்குமாரனாய் சம்பூர்ணாம்சமாக அவதரித்திருக்கிறான்.

பரசுராமன் : ஸ்வாமி ! அவரை ஸ்ரீமந் நாராயணனுடைய சம்பூர்ணாம்சமென்று நாம் எப்படி அறியலாம்.

நாரதர் : பார்க்கவா ! அந்த தசரத ராஜகுமாரனை விஸ்வாமித்ர மஹரிஷி தனக்கு எக்ஞ சம்ரக்ஷணார்த்தமாக அழைத்துக்கொண்டுபோய், தமது சித்தாஸ்ரமத்தில் யாகம் செய்ய ஆரம்பிக்குஞ் சமயத்தில் எக்ஞத்தை விக்னம் செய்யும் தாடகை, சுபாகு, மாரீசன் முதலான ராக்ஷஸர்களை ராமன் நிக்ரஹம் செய்து, எக்ஞத்தை ரக்ஷித்தவுடன் மாமுனி மிகவும் சந்தோஷித்து ராமனுக்கு ஜனகராஜ குமாரியான சீதாதேவியை விவாகம் செய்துவைக்க வேண்டுமென்ற அந்தரங்களுடன் மிதிலா நகரத்திற்கு அழைத்துக்கொண்டு வரும் மார்க்கத்தில் கௌதம சாபத்தினால் சிலையாக இருந்த அகலிகை சாப விமோசனமாகி ஸ்வரூபம் பெற்றாள்.

பரசுராமன் : இதனால் என்ன ஏற்பட்டது.

நாரதர் : கௌதம மஹரிஷி சாபவாக்யத்தில், நாராயணனே ஸ்ரீராமனாக அவதரிப்பார். அவருடைய பாதாரவிந்த ரஜஸினாலே சாபவிமோசனம் ஏற்படுமென்று சொல்லியிருப்பதால், இந்த ராகவனை நாராயண அவதாரமென்று தீர்மானிக்க என்ன சந்தேகமிருக்கிறது.

பரசுராமன் : தேவரிஷே! சரி அப்படியானால் அந்த தனுசை அவரிடத்தில் ஒப்புவித்துவிட்டு தபோ நிஷ்டையை அடைகிறேன். அவர் இப்பொழுது எங்கே இருக்கிறார்.

**நாரதர் :** பார்க்கவா! விஸ்வாமித்திரர் ராமனையும், அவர் தம்பி லக்ஷ்மணனையும் மிதிலைக்கு அழைத்துவர அவ்விடத்தில் கன்யாசுல்கமாக ஏற்பட்டிருந்த சிவ தனுசை ஸ்ரீராமன் ஆரோபணம் செய்தார்.

**பரசுராமன் :** சிவதனுசையா - ஹா

**நாரதர் :** ஆம். ஆரோபணம் மட்டிலா!

**பரசுராமன் :** பின்னுமென்ன ?

**நாரதர் :** ஆரோபணம் செய்தவுடனே அந்த சிவதனுஸ் இரண்டு துண்டாக முறிந்து விட்டது.

**பரசுராமன் :** ஆஹா! அப்படியா! உக்ரபராக்ரமரான எனது குருநாதனுன பரமேஸ்வரருடைய தனுசையா பங்கப் படுத்தினன். இருக்கட்டும் இந்த தனுசைக் கொண்டு அவருடைய பராக்ரமத்தை சோதிக்கிறேன்.

**நாரதர் :** சரி. சரி. அப்படி செய்யலாம். தசரத குமாரர்களான ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர்கள் நால்வருக்கும், ஜனகன் தனது கன்னிகைகள் நால்வரையும் கல்யாணம் செய்து கொடுத்து உபசரித்தார். இந்த சமயம் வெகு சம்பரமத்துடன் அயோத்திக்கு திரும்பும் சமயமாக இருக்கும்.

**பரசுராமன் :** இதோ போய்வருகிறேன்.

பாட்டு

ராகம் : கல்யாணி : நீதாஸனுதா. தாளம் : ஆதி.

பல்லவி

நானே செல்குறேன் வேகமுடன்
நானே செல்குறேன் வேகமுடனே
நாடி இன்றே வெல்குறேன் (நானே)

அனுபல்லவி

வீணை இதனை யறிந்திடாமல்
வேறு சிந்தனையிலே இருந்தேனே (நானே)

சரணம்

சிவனார் தனுர்பங்கம் செய்த
தீரன் தன்னையே போரில் வென்று
புவன மீதிலே ஜெயமாலை
பூணவே காணவே (நானே)

2-ம் அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 3.

## ஸ்ரீராமாவதாரம்.

(ஸ்ரீ ராம லக்ஷ்மண பரத சத்துருக்னர் கல்யாண கோலத்தில் தசரதர், ஜனகர், வசிஷ்டர் முதலியோர் புடைசூழ வருகிறார்கள்.)

பரசுராமர் : ஹே ! ராமா !

பாட்டு—தர்க்கம்

ராகம் : பந்துவராளி : தாளம் : ஏகம்.

பரசுராமன் : * மண்ணினில் அரசர்போல் காணுகிறாயே
ஆசீர்வாதம் ரகுராமா.

ஸ்ரீராமர் : கண்ணினில் வேதியர்போல் தோணுகிறாயே
நமஸ்காரம் பரசுராமா.

பரசுராமன் : தாடகையெனும் பெண்மேல் சண்டை
கொள்ள அரசர்க்கு தான் விதிபோ ராமா.

---

* அருணாசலக் கவிராயர் கீர்த்தனை.

ஸ்ரீராமர் : வேடர்கள் தொடும் வில்லை பிராம்மணன்
தொட தலைவிதியோ பரசுராமா.

பரசுராமன் : ஆனால் பெண் கொலை செய்யல் ஆமோ
உனக்கிது அடைவோ ரகுராமா.

ஸ்ரீராமர் : தானாக பெற்றெடுத்த தாயைக் கொலை
செய்தாயே தகுமோ பரசுராமா.

பரசுராமன் : தருமமாயெனைப் பெற்ற தகப்பன் சொல்படி
செய்தேன் தாய் கொலையோ ராமா.

ஸ்ரீராமர் : குருவார்த்தை தடுக்காமல் நானும்
செய்தேன் பெண் கொலையோ பரசுராமா.

பரசுராமர் : சொத்தை வில்லொடித்ததை மெத்த
மெத்தவே எண்ணி துள்ளாதே ரகுராமா.

ஸ்ரீராமர் : கற்ற வேதியன் என்று பொறுத்தேன்
பொறுத்தேன் குதிக்காதே பரசுராமா.

பரசுராமன் : அந்த வில் வளைத்தாயே இந்த
வில் வளை இந்தா அடடா ரகுராமா

ஸ்ரீராமர் : இந்தா வளைத்தேன் இதில் வைத்த
அம்புக்கு வழியெங்கே பரசுராமா.

பரசுராமன் : ஸ்ரீராகவா ! இந்த தனுசை உன்னிடம் சமர்ப்பித்து விட்டேன். உன்னை நன்றாயறிந்தேன். நான் செல்கிறேன். நமஸ்காரம். (ஸ்ரீராமரும் நமஸ்கரிக்க எல்லோரும் செல்கிறார்கள்.)

3-ம் அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 4.

### அயோத்தியாவாசிகள் பிரவேசம்.

**அயோத்தியாவாசி :** *என்ன ஐய்யா, சகோதரரே! நமது அயோத்தியாகிய ராஜ்யலக்ஷ்மி நல்ல திருப்தியான புருஷனை அடையப்போகிறாள்.*

**அயோத்தியாவாசி :** *தாங்கள் சொல்வது ஒன்றும் தெரியவில்லையே.*

**அயோத்தியாவாசி :** *நாளை உதயத்தில் ஸ்ரீராமச்சந்திரனையே பர்த்தாவாக அடைப்போகிறாள்.*

**தலைவன் :** *என்னைய்யா! இன்று சபையில் நடந்ததைத்தான் சொல்லுகிறீர். சக்கிரவர்த்தியார் சுமந்திரர், ரித்விக்குகள், அஷ்டமந்திரிகளாகிய வசிஷ்டர், வாமதேவர், கண்ணுவர், கார்க்கியர், ஜாபாலி, கார்த்தியாயனர், சுயக்ஞர், கௌதமர் முதலானவர்களும், அயோத்தியா நகரவாசிகளாகிய நமது தலைவர்களும் ஒத்துக்கொண்டார்கள். ஆகையால் நாம் இந்த அயோத்தியை இன்றிரவே இந்திர லோகம்போல் அலங்கரித்து இக்ஷ்வாகு குலதிலகனுன ஸ்ரீராமச்சந்திரனின் மகுடாபிஷேக ஆனந்தானுபவத்தை, புத்திர, மித்திர, களத்திரர்களோடு நித்யவிபூதியாகிய வைகுண்டத்தைப்போல் அனுபவிக்கும் சமயம் இதுவே. இன்றிரவு முழுமையும் இதே முயற்சியாக சகல அலங்காரங்களும் செய்து சூர்ய உதயத்துக் கெல்லாம் ராஜ கிருஹத்துக்கு சென்று ரகுநாயகனுடைய திவ்ய மகுடாபிஷேகத்தின் காக்ஷியைக்கண்டு களிப்படைவோம் வாருங்கள்.*

பாட்டு.

ரகுபதி ராகவ ராஜா ராம்
பதித பாவன சீதாராம் (ரகுபதி)

4-ம் அங்கம் முற்றிற்று.

---

களம். 2. அங்கம் 5.

## கைகேசி அந்தப்புரம்

கூனி: ராணி! ராமனைப்பற்றி விஸ்வாஸமாய் இதுவரை யிலும் என்னோடு தர்க்கித்ததை மறந்துவிடு. முடிவாக நான் சொன்னதையும் நீ ஒப்புக்கொண்டதையும் ஞாப கத்தில் வை. மஹாராஜாவைக் கண்டதும் சந்தோஷத் தினால் காரியத்தை மறந்துவிடாதே. தன் கௌரவத்தை யும், லாபத்தையும் தேடின பிறகு தான் பிறரைப்பற்றி நினைக்கவேண்டும். தனக்கு மிஞ்சிதான் தருமம். மஹா ராஜா வருகிறார். ஜாக்கிரதை.

கைகேயி: அடியே மந்தரா! எனக்கென்னவோ பயமாக இருக்கிறது. நீயும் இங்கேயே இரு ஒரு புரத்தில்.

மந்தரை: நீ போய் கோபமாய் இருப்பவள்போல் சயனித் துக்கொள். நானிங்கே தான் ஒரு புறமாக இருக்கி றேன்.

தசரதர் பிரவேசம்.

தசரதர்: தாசி? கைகேயி எங்கே.

தாசி: ராணியார் சயனித்திருக்கிறார்கள்.

தசரதர்: நித்திரையோ?

தாசி: இல்லை, விழித்துக்கொண்டுதானிருக்கிறார்கள்.

தசரதர்: சரி, உதயத்தில் ஸ்ரீராமச்சந்திரனுக்கு மகுடாபிஷேகம் செய்வதற்காக, ஸ்ரீராமனை ஆடையாபரணங்களால் அலங்கரிப்பதற்காக அவள் யோசனைசெய்து கொண்டிருப்பாள். பிரியே! கைகேயி! என்ன யோசித்துக் கொண்டிருக்கிறாய்? உதயத்தில் ஸ்ரீராமச்சந்திரனுக்கு மகுடாபிஷேகத்திற்காக குருநாதனின் உத்திரவுப்படி ஸ்ரீராமனும் சீதையும், ஸ்ரீ ரங்கவிமானத்தை உபவாசத்துடன் பூஜிக்கிறார்கள்.

கைகேயி: நாதா! தேக அயர்ச்சியினால் சயனித்திருந்தேன்; வேறொன்றுமில்லை. இந்த சந்தோஷ சமயத்தில் நான் சந்தோஷிக்க வேண்டாமா?

தசரதர்: ஆம். ஆம். சந்தோஷிக்கவேண்டியதுதான். ப்ரியே! உனக்கென்னவேண்டும் கேள்.

கைகேயி: நாதா! சம்பராசுரயுத்தகாலத்தில் எனக்கு கொடுத்த இரண்டு வரங்கள் வேண்டும்.

தசரதர்: இதுதானே—கொடுத்தேன். நிற்க, மகுடாபிஷேகத்தைப்பற்றி உன்னிடம் சொல்லிவிட்டு பிறகு ராஜ மண்டபம் போவதற்காகவே இங்கு வந்தேன்.

கைகேயி: வரங்களைக்கேட்டேனே அதற்கொன்றும் பதில் சொல்லவில்லையே.

தசரதர்: ஆம! ஆம்! அதனுடைய விவரமென்ன.

கைகேயி: கொடுப்பது உண்மைதானா?

தசரதர்: நாம் இக்ஷ்வாகு வம்சமல்லவா?

கைகேயி: நாதா! பரதன் ராஜ்யமாளவேண்டும் ஒன்று. இரண்டாவது, பதினான்கு வருடம் காட்டிற்சென்று, தவக் கோலங்கொண்டு ராமன் தவம் செய்யவேண்டும்.

**தசரதர்:** அடி பாபி! என்ன வார்த்தை சொன்னுயடி. என்ன வார்த்தை. என்ன-வார்த்தை-அப்பா உலகம் நடுங்குமே. ஸ்ரீராமனையா, ரகுகுலோத்தமனையா, ராகவனையா, காட்டிலா, தவலக்கோலங்கொண்டா, தவமா செய்ய வேண்டும் என் கல்யாண ராமன்? அம்மா கைகேயி நீ இப்படிப்பட்டவளா? இந்த சூர்யவம்சத்தின் சத்திய தர்மமே உருவாக வந்த ஸ்ரீராமன் விஷயத்திலா நீ இந்த எண்ணங்கொண்டாய், பரதன் விஷயமாக நீ கேட்டது உலகம் ஒப்பாவிட்டாலும் நீ கேட்கலாம் சகஜம். ராமனைப்பற்றி ஏதோ தெரிவித்தாயே. அதை நினைக்கவும் சொல்லவும் என் மனம் நடுங்குகிறதே. என் உயிர் தவிக்கிறதே. ஹா! ராகவா! அறுபதினுயிரம் வருடம் புத்ரபாக்யமில்லாத எனக்கு புத்ரகலிதீர்த்த புண்ணியனே, உன்னைக்காட்டிற்கனுப்பி நான் உயிரோடிருக்கவா? ஹா! ராகவா. ராகவா. ராகவா. இனி எந்த ஜென்மத்தில் உன்னைப் புத்திரனுக பார்க்கப்போகிறேன். (மூர்ச்சிக்கிறுர்.)

## சுமந்திரர் பிரவேசம்.

**சுமந்திரர்:** அம்மா! குருமஹான் சக்ரவர்த்தியாரை அழைத்துவரச் சொன்னுர்.

**கைகேயி:** நல்லது. மந்திரியாரே ராமச்சந்திரனை நான் அழைத்ததாக உடனே அனுப்பவேண்டும்.

**சுமந்திரர்:** உத்திரவு.

**கைகேயி:** (தனக்குள்) ஸ்ரீராமச்சந்திரன் வந்தவுடன் கூனியை ஒருதரம் நினைக்கவேண்டும். அப்பொழுது தான் இந்த துஷ்டவார்த்தைகள் வாய்கூசாமல் நமக்குவரும்.

## ஸ்ரீராமர் பிரவேசம்.

**ஸ்ரீராமர்:** அம்மா நமஸ்காரம்.

**கைகேயி:** கண்மணி ராமச்சந்திரா! உன் தந்தையார் கட்டளை யிட்டார். பரதன் ராஜ்யமாளவேண்டுமாம். நீ பதினான்கு வருடம் காட்டிற்கு சென்று தவம் செய்யவேண்டுமாம். இன்றே புறப்பட வேண்டுமாம்.

**ஸ்ரீராமர் :** அன்னையே கிருதார்த்தபடைந்தேன். (தசரதனை நோக்கி)

பிதா நான் சென்று வருகிறேன்.

**தசரதர் :** கண்ணே, என் உயிரே, என் ஊனே, என் உறவே, நீ காட்டிற்கு போகிறாயா, வேண்டாமடா. கைகேயி ஸ்ரீராமனை காட்டிற்கனுப்பாதே. இதோ—(தசரதர் கைகேயி பாதத்தில் நமஸ்கரிக்கிறார்.)

5-ம் அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 6.

## லக்ஷ்மணர் பிரவேசம்.

**லக்ஷ்மணர் :** ஹா. ஹா. பிரம்மா தொடங்கி, மரீச்சிஹி, காஸ்யபர், விவஸ்வான், மனு, ஆதி வட்ஸஸ்தர்கள் தொடங்கி பூமண்டலம் முழுமையும் மனு, இக்ஷுவாகு வுக்கு அளிக்க இக்ஷுவாகு சக்கிரவர்த்தி தொடங்கி குக்ஷி, விகுக்ஷி, பாணன், அனரண்யன், பிருது, த்ரி சங்கு, துந்துமாரன் எனும் ஹரிச்சந்திரன், யுவனாஸ்வன் என்னும் தேவதாஸன், மாந்தாதா, சுசந்தி, துருவசந்தி, பரதன், அசிதன், சகரன், அசமஞ்சன், அம்சுமான்,

திலீபன், பகீரதன், ககுஸ்தன், ரகு, கல்மாஷபாதன். சங்கனன், சுதர்சனன், அக்னிவர்ணன், சீக்ரஹன், புரு, ப்ருஸுஸ்ருகன், அம்பரீஷன், நகுஷன், யயாதி, நாபாகன் எனும் புரூரவன், அஜமகாராஜன், இப்படி இக்ஷுவாகு வம்ஸத்தார்களாகிய, இந்த சூர்யகுல அரசர்கள் நடந்துவந்த சத்திய தர்மங்களென்ன— இந்த அஜமகாராஜனுக்குப் பிறந்த தசரதன் தன் கனிஷ்ட பாரியையாகிய, கைகேயின் வார்த்தைக்குட் பட்டு ரகுநாயகனாகிய ராகவனுக்குரிய மகுடாபி ஷேகத்தை தவிர்த்து, பாதனுக்கு மகுடாபிஷேகமா ?

பாட்டு.

ராகம் : அம்ஸத்வொனி. தாளம் : ஆதி.

பல்லவி

நானே தருவேன் மகுடம்
என் அண்ணனுக்கு (நானே)

அனுபல்லவி

யானை, பரி, ரதசேனை முதல் எல்லோரும்
தானே சமர்புரிய நினைந்தாலும்
போர் முனைந்தாலும் எதுவிளைந்தாலும் (நானே)

சரணம்

அந்த கைகேயி, சொன்ன தந்திர மொழியால்
தந்தை சிந்தை மயங்குவது முறைதானு
எந்தன் தமையன் ராமச்சந்திரன் வனம் செல்ல,
தந்த ஆக்கினை மனுநெறிதானு
இந்த பரதன் இனி வந்து ராஜ்யமாளும்
விந்தை நடக்க நாளும் விடுவேனே உடன் படுவேனே.
தடை புரியேனே இனி (நானே)

தம் வம்சத்திற்கு ஈனத்தை தேடிய இந்த தசாதனுக்கு பரிந்து துணையாக மூன்று உலகத்தவர்களும், யுத்தத்திற்கு வரட்டும், இந்த லக்ஷ்மணனுடைய சக்தியை காட்டுகிறேன். சகல உயிர்களேயும் பஞ்சாக பறக்கச் செய்கிறேன். இந்த இக்ஷ்வாகு வம்சத்தில் நான் பிறக்கவில்லையா? என் உயிருக்கு மேலான ஸ்ரீராமச்சந்திர மூர்த்திக்கு நான் ஒருவனுகவே இருந்து மகுடம் சூட்டுகிறேன். இதை தடுக்க சக்தி யுள்ளவர்கள் வரட்டும். ஹா—ஹா. திவ்யமங்களாஸ்வரூப, சுகுமாரா சரீரரான, ஸ்ரீராமனை காட்டிற்கா போவது? என்னை உலகம் அறியவில்லை போலும்.

ஸ்ரீராமர் : லக்ஷ்மணு!—தம்பி லக்ஷ்மணு, கோபம் பாபமல்லவா? கோபிப்பது யாரை? ஈன்ற தாய் தந்தையர்களேயா? தான் சாக மருந்துண்பார் களுண்டா? தான் பெற்றபிள்ளைகளுக்குத் தீங்கைத் தேடுவார்களா? பெற்றோர் பெரிய காரியத்தை முன்னிட்டு ஒரு கட்டளை செய்வார்கள். அதை தீங்கைப்போல் நினைப்பது உலக இயற்கை. உனக்குமா அப்படி? நீ மஹா புத்திமானல்லவா? உன்னைப் புகழ்ந்து நமது குருமஹான் பல தடவைகளிலும் பேசியிருக்கிறுரே; நமது தாய் தந்தையர்கள் இப்பொழுது செய்திருக்கும் கட்டளை மூன்று லோகங்களும் ஒப்பத்தகுந்தது. ராஜ்யபாரம் செய்வது ஸ்ரமம். அந்த ஸ்ரமமான காரியத்தை கனிஷ்டனுகிய பாதனுக்கு கட்டளை யிட்டார். இகபா சுகந்தரும்படியான ஸத்துவமான தவத்தை எனக்கு கட்டளை யிட்டிருக்கிறுர். இது புத்ரோத்தமருடைய தர்மம்.

லக்ஷ்மணர் : அண்ணா! இந்த உத்தம தர்மங்களை நமது குருமஹான் வாசாவிலும் கேட்கவில்லையே. ஆனால் எனக்கொரு வரம் தரவேண்டும்.

ஸ்ரீராமர் : லக்ஷ்மணா! எழுந்திரு.

லக்ஷ்மணர் : வரங்கொடுக்க வேண்டும்.

ஸ்ரீராமர் : கொடுத்தேன். எழுந்திரு.

லக்ஷ்மணர்: என்னையுந் தாங்கள் காட்டிற்கழைத்துச் செல்ல வேண்டும். என்னை அனாதியாக விட்டு செல்லவேண்டாம். இதுவே என் வரம்.

ஸ்ரீராமர் : ஹாம் சரி.

6-ம் அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 7.

## சீதை அந்தப்புரம்.

## ஸ்ரீராமர் பிரவேசம்.

சீதை : நாதா! என்ன கோலமிது.

ஸ்ரீராமர் : ப்ரியே! நமது தந்தையார் அநேக காரியங்களை முன்னிட்டவராய், நமது இக்ஷுவாகு வம்சம் இன்னும் செழிக்க உத்தேசித்தவராய், சூர்ய குலத்தில் நூதனமான தர்மத்தை ஸ்தாபிக்கும் பொருட்டாய் நமது தம்பி பரதன் ராஜ்யமாளும்படியாகச் செய்து என்னை காட்டில் சென்று, பதினான்கு வருடம் தவம் செய்யும் படியாகச் சொன்னார். அந்த வார்த்தையானது நமது வம்சத்திற்கு அதி உத்கிருஷ்டமாகவும், பேதா பேதமில்லாததாகவும், நமது குடும்பஸ்தர்கள் எல்லாரும்

ஒரே உயிராகவும் ஒரே சரீரமுள்ளவர்களாகவும் ஸ்தாபிக்கிறது. பதினுன்கு வருடம் பதினுன்கு நாட்களாகக் கழித்து உன்னை வந்து பார்க்கிறேன்.

சீதை: நாதா! பிதா அவர்களாக்கினையை சிரமேற்கொண்டு நடக்க வேண்டியதுதான். நமது வம்சத்திற்கு கீர்த்தியை தேடவேண்டிய தவஸ்யமே. நாமெல்லோரும் ஒரே உயிர், ஒரே சரீரமென்று தாங்கள் தெரிவித்ததில் மிகுந்த திருப்தியடைந்தேன். ஆனல் தாங்கள் பிதுர் வாக்ய பரிபாலனத்தை சிரமேற் கொண்டதுபோல் தமது குலத்தின் ஊழியாளாகிய நான் எனது தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டியதல்லவா?

ஸ்ரீராமர்: நீ என்ன தர்மத்தை அனுஷ்டிக்க அபேக்ஷிக்கிறாய்.

சீதை: எனது பிதாமிதிலாதிபர் நமது விவாக காலத்தில் என் கரத்தைப் பிடித்து, தங்களுடைய கரத்தில் கொடுத்து, எப்பொழுதும் என்னை விட்டுப் பிரியாதிருக்கும்படி பிரார்த்தித்தாரல்லவா? எனக்கும் சதா பர்த்தா நிழலிலேயே வாசம் பண்ணும்படி போதித்தாரல்லவா? இதற்கென்ன சமாதானம்.

ஸ்ரீராமர்: ப்ரியே! ஆனல் உன்னுடைய அபேக்ஷையென்ன.

சீதை: நானும் தங்களோடு காட்டிற்கு வருவது தான் எனது அபேக்ஷை.

ஸ்ரீராமர்:

பாட்டு.

ராகம்: சாரங்க. தாளம் திரிபுடை

*சுபலலித சுகுண வைதேஹி
சொல்லைத் தள்ளாதே கேளாய் வைதேஹி

* தி. நாராயணசாமிபிள்ளை ராமநாடகப் பாட்டு.

தவம்செய்வது கடினம் வன்காட்டில் உன்னால்
சகிக்க முடியாதடி வைதேஹி
காற்று மழை இடியும், வெய்யிலாலே
கலங்கி வருந்துவாயே வைதேஹி

ஸ்ரீராமர்: ஜனகராஜ புத்ரி! நீயும் காட்டிற்கா வருகிறாய். நீ மிதிலையில் குழந்தை முதல் சகல ராஜபோகங்களோடு, அருமையாயிருந்து வளர்ந்து வந்தவள். பிறகு என்னை மணந்து அயோத்தியில் பல்லாயிரம் தோழிமார்கள் பணிவிடை செய்யவும், புஷ்ப சயனத்தில் சயனிக்கும் உன் மெல்லிய திருமேனி என்னோடு காட்டில் வந்து கற்களிலும், முட்களிலும், நடந்து காற்றினாலும், மழையினாலும், பனியினாலும், வெய்யிலினாலும் கலிய உன்னால் முடியுமா? அயோத்தியில் தாய்மார்களும், தம்பிமார்களும், உன் தங்கைமாரும், தந்தையாரும, சகிமார்களோடும் சுகமாய் இரு. நான் பதினான்கு வருடங்கள் முடிந்ததும், உடனே வருகிறேன்.

சீதை:

ராகம்: தோடி. ஜேஷினதெல்ல மரசிதிவோ. தாளம்: ஆதி

பாட்டு.

பல்லவி

எந்தவிதம் மனந்துணிந்தீரோ
என் பிராணநாதா (எந்த)

அனுபல்லவி

அந்தோ என்சிந்தை நோக ஆஹா நீர் தனியேக (எந்த)

சரணம்

தரியேன் சாமி நானுமைப் பிரியேன்
பிரிந்தாலெனது துயிர்
உரிய என் ஜீவ நிதியே
உம்மையல்லால் யார் கெதியே (எந்த)

**சீதை:** நாதா! தாங்கள் சொன்ன ஆரண்யத்திலுண்டாகும் கஷ்டங்களெல்லாம் தங்களைப் பிரிந்திருக்கும் கஷ்டத்தைப்பார்க்கிலும் கஷ்டமல்லவே. நாதா! நானும்கூடத்தான் வருவேன்.

**ஸ்ரீராமர்:** சரி; நீயும் வா; புறப்படு.

ஏழாவது அங்கம் முற்றிற்று.

---

களம் 2. அங்கம் 8.

ஸ்ரீராம லக்ஷ்மணர் பிரவேசம்

**சுமித்திரை:** புத்திரா! என்ன.

**லக்ஷ்மணன்:** அன்னையே! பிதுர்வாக்யபரிபாலனார்த்தம் ஸ்ரீராமண்ணா காட்டிற்கு தவம் செய்யச் செல்கிறார். என்னையும் ஆசீர்வதித்து அவருடன் அனுப்பப் பிரார்த்திக்கிறேன்.

**சுமித்திரை:** செல்வமே! அப்படியே ஆகட்டும். அதுவே சத்தியம். அதுவே தர்மம். பால்யத்திலிருந்து ஸ்ரீராகவனை இதுவரையிலும் பிரியாதிருந்தது சிலாக்யமல்ல. இனியும் நிரந்தரமும் ராகவனைப்பிரியாமல் அவன் நிழலைப்போல் வசிப்பாயாக. ஸ்ரீராமன் செல்லுங்காடே அயோத்தியாக நினை. ஸ்ரீராமச்சந்திரனை உன் பிதா சக்கிரவர்த்தியாராக நினை. மகாத்மாவாகிய ஜனகராஜன் பெற்ற சீதையை என்னைப்போல் நினை. இதனால் உனக்கு சர்வ மங்களமும் சத்கீர்த்தியும் உண்டாகும். ஸ்ரீராமன் மீண்டும் அயோத்திக்கு வரும்போது நீ வா.

## கோசலை ப்ரவேசம்.

ஸ்ரீராமர் : அம்மா ! சத்தியத்தையே நித்தியமாகக்கொண்டு அறுபதினாயிரம் வருடமாண்ட எனது பிதாவாகிய சக்கிரவர்த்தியார் எனதருமை தம்பி பரதன் ராஜ்யம் ஆளவும், நான் காட்டில் தவஞ்செய்யவும் கட்டளையிட்டார். இதன் உண்மை அறியாமல் நமது ஜனங்கள் சஞ்சலப்படுகிறார்கள். பேதமில்லா புத்திரர்கள் வாஞ்சையுடைய பெருங்குணமுடைய தாங்கள் என்னை ஆசீர்வதித்து அனுப்பப் பிரார்த்திக்கிறேன் அம்மா.

கோசலை : கண்ணே ! என் குலவிளக்கே ! என் செல்வமே ! உன்னை நான் புத்திரனாக அடைந்ததற்கு பலன் இது தானா ? பலகாலம் பல தர்மங்களைச் செய்து பல நோன்புகளை நோற்று பலதெய்வங்களை பிரார்த்தித்து பூஜித்த பலனா இது ?

ஸ்ரீராமர் : ஆமம்மா, அந்த பூஜாபலன் தான் பிரதி பலித்தது. இதன் பலத்தின் சாரத்தை தாங்கள் அடைவீர்கள். தாங்கள் செய்த புண்ணியங்கள் கொஞ்சமல்லவே. அதிகமான புண்யம் செய்தவர்கள் சில காலம் கழித்துதான் அதன் பலனை அடைவார்கள். அந்த பலனே என்னைப் பெற்ற தாங்களும் தாங்களீன்ற நானும் நாமிருவரும் உலகமுள்ளளவரையிலும், கீர்த்தியுள்ளவர்களாவோம். சஞ்சலத்தை விடுங்கள். சமாதானமான உத்திரவு தாருங்கள்.

கோசலை : கண்மணிகாள்! ஸ்ரீராம! லக்ஷ்மணா! சீதா! உங்கள் மூவரையும் பிரிந்து வாழும் வாழ்க்கையே என் சொந்த வாழ்க்கையாக முடிந்தது. என் குலத்தை ஈடேற்ற

வந்த குலமணியான சீதா! உன்னையும் நான் பிரிந்திருக்க வேண்டுமா? பதிவ்ருதா தர்மத்தை பரிபாலிக்க வந்த ஏ பெண்கள் நாயகமே! ஆரண்யத்தில் உனக்கெந்த விதமான கஷ்டங்கள் நேர்ந்தாலும், நமது குல தெய்வமாகிய ஸ்ரீரங்கநாதனே உன்னைக் காப்பாற்றுவாராக.

ஹா! ராமபத்ரா! சீதா! லக்ஷ்மணா!

எட்டாவது அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 9.

அயோத்யாவாசிகள்: ஹா! ஹா! என்ன அநியாயமய்யா. இந்த சூர்ய குலத்தில் இப்படிப்பட்ட அக்கிரமம் நடந்ததாக நமது முன்னோர்களாலும் கேள்விப்படவில்லை ஐயா. ஸ்ரீராமச்சந்திரன் தன் சரீரத்தில் மாவுரி தரித்து காட்டிற்கு போகிறாய்யா; பால்யமுதல் நாம் அவரோடு பழகின ஸ்நேகத்துக்கு நாமும் நமது கண்களும் செய்த பாக்யம் அவரை இந்த கோலத்தில் பார்க்க நேர்ந்தது. ஸ்ரீராகவன் தன்னை சக்கிரவர்த்தித் திருக்குமாரராகவா நினைத்திருந்தார்? அவரது சௌலப்ய குணங்களை நினைத்தால் அவரைப்பிரிந்து உயிரோடும் இந்த அயோத்யாவாசிகளும் வசிப்பார்களா?

ஒருபெண்: சகோதரா! ராமச்சந்திரா! பால்யமுதல் எங்கள் கிருஹங்களுக்கு வந்து பேதமில்லாமலும், நீ ராஜகுமாரனென்ற ஞாபக மில்லாமலும், நடந்துகொண்ட உன் அருமையை உன்னை மகுடாபிஷேக கோலனாகப்பார்க்க

ஆவலுற்றிருந்த எங்களை தவிக்கவிட்டு நீ ஆரண்யம் செல்லவா துணிந்தாய். நாதா! நீங்கள் எல்லாரும் ஸ்ரீ ராமனை அழைத்துவர காட்டிற்குச் செல்லுங்கள். அல்லது எங்களையும் கூட அழைத்துச் செல்லுங்கள். நாங்கள் ஸ்ரீராமனைப்பிரிந்து இந்த அயோத்தியில் வசிக்கவே மாட்டோம்.

அயோத்யாவாசி: சகோதரிகளே! நீங்கள் பெண்கள். காட்டிற்கு வரவேண்டாம். உங்களுடைய துக்கத்தை வாயால் சொல்லி முடித்து விட்டீர்கள். நாங்கள் இடி விழுந்த மரம்போல் நின்றோம். ஸ்ரீராமன் காட்டிற்குபோகிறார் என்றவுடன் ராஜ்யத்திலுள்ள யானைகளும், குதிரைகளும், பசு, பக்ஷி, முதலான சகல ஜீவராசிகளும் கண்ணீர் விட்டு கதறுகிறதென்றால் நம்முடைய துக்கத்தை சொல்லவும்வேண்டுமா? பால்யமுதல் நாங்களும் அவரோடு கூடவே இருந்து சகலவித சல்லாபங்களையும் அனுபவித்தவர்களல்லவா? ஸ்ரீராகவனைப் பிரிந்து நாங்களும் உயிர் வாழ்வோமா?

அயோத்யாவாசி: சுமந்திரர் ஸ்ரீராகவனோடு வழிவிடப்போயிருக்கிறார். சமாதானம் சொல்லி அழைத்து வருவதாக அவர் உத்தேசம். அவர்மாத்திரம் அழைத்தால் வரவே மாட்டார். நாமனைவரும் சென்று அயோத்திக்கு திரும்பிவரும்படி பிரார்த்திப்போமய்யா.

அயோத்யாவாசி: அதுதானைய்யா சக்ரவர்த்தியின் அபிப்பிராயமும். அதை உத்தேசித்தே சக்ரவர்த்தியாரும் மந்திரியாரையுங்கூட அனுப்பியிருக்கிறார். ஆனால் பெண்களின் கலகமிது. பெண்கள் கலகம் பிரளயமா

கத்தான் முடியும். அந்த கைகேயியம்மாள் அயோத்தியா வாசிகளின் வயிற்றில் தீயை வைத்தாள்.

அயோத்யாவாசி : அந்தம்மாள்தான் என்ன செய்வாள். அந்தம்மாளுக்கு யார் போதித்த போதனையோ.

அயோத்யாவாசி: அவளும் பெண்ணாகத்தானிருப்பாள்.

ஒருபெண்: போங்களய்யா போங்கள். நீங்கள் போங்கள் இங்கேயே பேசிக்கொண்டிருக்கிறீர்களே. சீக்கிரம் போங்கள். ஸ்ரீராமச்சந்திரனை அழைத்துவாருங்கள். ஸ்ரீராமச்சந்திரன் அயோத்திக்கு வாராமல் குழந்தைகளின் பசியையும் கவனிக்மாட்டோம்.

பாட்டு.

ராகம்: அரிகாம்போதி. பரமாத்முனி. தாளம். ரூபகம்.

ரகுநாயக ரவிகுலமகிழ் ரம்ய கர்த்தனே ராமா
புகழ்மேவிய புருஷ உத்தம புண்ய நூபனே ராமா
கண்ணாய் கண்மணியாய் உம்மைக்கருதி நின்றோமே ராமா
அண்ணா எனதப்பா எங்கள் அருமைநேசனே ராமா
அய்யா உம்மை எவ்விதம் பிரிந்தாவிதரிப்போம் ராமா
மெய்யாயுமைக்கண்டு மகிழ மிக அலைந்தோமே ராமா
கருணாகர கனதாயக கவிஞர்மணியே ராமா
சரணாகத விரத பூரண சர்வகாரணா ராமா
மரகத நிற தேஹலக்ஷ்ண மனுகுல முதல்வா ராமா
பாவுமன்பர் மனமறிந்த பாக்யவந்தனே ராமா
சீரயோத்தி நகரைக் காக்கும் செயலுடையவரே ராமா
வீரசிங்க வினயதுங்க வேந்தர் திலகனே ராமா
கோசிகர் தன்வேள்வி முடித்த குணமா மணியே ராமா
பேசமுசித சத்ய வாக்ய பெருமான் நீயே ராமா

கல்லையொரு பெண்ணாகச் செய்த கமலபாதனே — ராமா
நல்லோர் துயர் தீர்க்கும் தீரகவிலுதாரனே — ராமா
எமதன்னை ஜானகி மகிழ் இனிய நாதனே — ராமா
ஏங்கிட எமைவிட்டு வனத்திற்கேன் அகன்றீரோ — ராமா
பரசுராமர் கெர்வபங்க பரமதுங்கனே — ராமா
சுரபூசுரர் துதிக்கும் ஜேயசுகிர்த சிலாக்யனே — ராமா
எந்தாயுமை வெங்கானகத்தெவ்விதம் விடுப்போம் — ராமா
செந்தாமரை மலர்வதனு சீர்மோகனனே — ராமா
எமதருமை தந்தையாக எண்ணி நின்றோமே — ராமா
அமையுங்காடு நீர் செல்ல அறிவிழந்தோமே — ராமா

கிழவர்கள்: ராமபத்ரா, ராமா, ராமா, ராமசந்திரா.

ஒன்பதாவது அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 10.

## அயோத்தி வீதி

பரத சத்துருக்கனர் பிரவேசம்.

**பரதன்:** தம்பீ! சத்துருக்கனு! கேகயே தேசத்தில் நான் கண்ட கனவை உனக்கு தெரிவித்தேனே, அதற்கு தகுந்தது போல் அயோத்தியின் ராஜ வீதியைப் பார்த்தனையா? வீதியில் ஜனங்கள் நடமாட்டமே இல்லை. வீடுகளின் கதவுகளெல்லாம் சாற்றியிருக்கின்றன. அரண்மனையில் மேன்மாடியில் த்வஜங்களைக்காணோம். முரசவாத்தியங்களின் ஓசையுமில்லை. ராஜ்யம் பூராவும் பாழடைந்திருக்கிறது. ஸ்ரீராமண்ணு இருக்கும் இந்த நகர் சோபையில்லாமலிருக்கிறதே. நமது பிதாவுக்கு என்ன

சம்பவம் நேர்ந்ததோ? திடீரென்று மனம் துக்கத்தில் மூழ்குகிறது சரி. எந்தவித கஷ்டங்களும் ஸ்ரீராமண்ணு இருக்க நமக்கொன்றும் நேராது. என் மனம் சஞ்சலப்படுவதற்கு காரணம் ஸ்ரீராமண்ணுவை சில நாட்களாகப் பிரிந்திருந்ததினுல் உண்டான தோஷங்களே. சீக்கிரம் நமதண்ணு ரகுநாயகனைப் பார்க்கவேண்டும். ஹா! என்ன ஆச்சர்யம். மனதைத் தேற்றிக்கொண்டு அரண்மனைக்கு போவோமென்று புறப்பட ஏதோ ஒரு துக்க சம்பவமான கவலை தோன்றுகிறதே. என்ன நடந்ததோ! ஏது விளையுமோ! சீக்கிரம் வா.

## கைகேயி அந்தப்புரம்

பரதன்: அம்மா! நமஸ்காரம்.

கைகேயி: புத்ரா! பரதா! என் பிதா ராஜ்யத்திலிருந்துவந்த நீ, என்ன—முகவாட்டத்தோடிருக்கிருய்.

பரதன்: அம்மா! நான் ராஜ்யத்திற்கு பிரவேசித்தது முதல் நமது அயோத்தியா வாசிகள் என்னைக்கண்டு அச்சமுற்ருர்கள். சிலர் கண்டும் காணுதவர்கள்போல் மறைந்தார்கள். அரண்மனையில் ஒருவரும் என்னை வரவேற்கவுமில்லை. உபசரிக்கவுமில்லை. இப்படி எல்லாரும் என்னை நிக்ரஹிக்க பிதா என்னை வெறுத்தாரா? என்ன சம்பவம் நேர்ந்தது? பிதா எங்கே?

கைகேயி: பரதா! நடந்த உண்மையைச் சொல்லிவிடுகிறேன். என்னை கோபிக்காதே. உன் பிதா சம்பராசுர யுத்த சமயத்தில் எனக்கு இரண்டு வரங்கள் கொடுத்திருந்தார். அதை வேண்டுமென்ற கேட்டேன். கொடுத்தார். அது

வும் கூனி ஞாபகப்படுத்தினாள். இரண்டு வரங்களில் ஒன்றினால் நீ ராஜ்யமாளவும், மற்றொன்றினால் ஸ்ரீராமன் காட்டில் சென்று தவம் செய்யவும் கேட்டேன். ஸ்ரீராமனும், லக்ஷ்மணனும், சீதையுமாக காட்டிற்குச் சென்றார்கள். அவர்களின் பிரிவை சகியாது உன் பிதாவும் உயிர் விட்டார்.

பரதன் : ஹா ! ஹா ! தெய்வமே ! இவ்வளவு துன்பங்களைக் கேட்கத்தான் நான் கண்ட கனவோ ? அம்மா தாங்கள் தான் ஸ்ரீராமனை காட்டிற்கு போகக் கேட்டீர்களோ ? பரதன், தான் ராஜ்யமாள தாயைக் கொண்டு ஜேஷ்டனாகிய ஸ்ரீராகவனை காட்டிற்கனுப்பினானென்று உலகம் சொல்ல இந்த கீர்த்தி எனக்குத்தானம்மா. தங்களுக்கு அல்ல. மஹா பாபியாகிய நான் தங்கள் உதிரத்தில் ஜனித்த தோஷத்தால் உண்டான துற்புத்தி தானே தங்களை இவ்வாறு கேட்கும்படிச் செய்தது. உலகத்தில் மஹா பாபி நான்தான். சூர்யகுலத்து அரசர்களெல்லாம் சத்தியமே நித்தியமென்று அரசாண்டு வந்த இந்த பாரம்பரியமான வம்சத்தில் யாதொருவன் சத்திய விரோதியாய், அதர்மக் களஞ்சியனாய் தங்கள் வயிற்றில் பிறந்தேன். அம்மா ! ராகவனை தவக்கோலத்தோடு இவ்வளவு கடின சித்தமுள்ள நீங்களே நேரில் காண சகிக்கமாட்டீர்களே? ஐயோ ! உலகத்துயிர்கள் எப்படியம்மா சகித்தன? சக்கிரவர்த்தியாரோ புத்திரனை உயிராகப் பாவித்து இருந்தார். உயிரைப்போன்ற அவர் காட்டிற்குப் போகவும், அவர் உயிரும் உடலை விட்டு நீங்கியது.

கோசலை பிரவேசம்

பரதன் : நமஸ்காரம்.

கோசலை : பரதா! உன் தாய் கைகேசி உன்பொருட்டு செய்த தால் விளைந்த நிகழ்ச்சிதான்.

பரதன் : தாயே! என் அம்மா.

"என்னன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்
உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு."

என குழந்தைப் பருவமுதல் பால்கொடுத்து மருந்து கொடுத்து, சீராட்டி, தாலாட்டி, வளர்த்த தங்கள் நன்றியை மறக்கக் கூடியதோ? மறந்தால் நான் அடையும நரகத்துக்கு கணக்குண்டோ? தாங்கள் என்னை சந்தேகிக்கலாமா? என்னை யீன்ற தயைவிட, தாங்களே ஸ்ரீராமண்ணாவைப் பார்க்கிலும் அருமையாக வளர்த்து வந்தீர்கள். அம்மா! இந்த ராமத்துரோகத்திற்கு நான் உடன்பட்டிருந்தால், சகலவித பாபங்களும் செய்தவர்கள் அடையும் நரகத்தை நானடைவேனம்மா.

கோசலை : கண்மணி! பரதா! உன்னுடைய உத்தமகுணங்களை யறிந்தும் என் பெண் புத்தியினால் சந்தேகித்தேன். என்னை மன்னித்துக்கொள்.

பரதன் : அம்மா! எனக்கிவ்வளவு துன்பங்களும் சேர்ந்ததற்கு காரணம் ஸ்ரீராமண்ணாவை விட்டுப் பிரிந்து கேகேய தேசம் போனதே யாகும். (பரத சத்ருக்னர் தசரதர் மரணமுற்றிருப்பதைக் கண்டு மூர்ச்சையாய் விழுகிறார்கள்.)

10-வது அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 11.

**சுமந்திரர் :** *பரதா! அதோ நிற்கும் வேடுவத்தலைவன் உன தண்ணனுக்கு உயிர்த்தோஷன். அவன் பெயர் குகன். வேடுவ அரசன். இந்த கங்கைக்கரையில் ஓடங்களுக் குடையவன். இவன் ஸ்ரீராமச்சந்திரனை தன் சைன் யங்களோடு வந்து உபசரித்தவன். உன் தமையன் இவனை சகோதரனாக அங்கீகரித்தார். உன்னைக்காண நிற்கிறான்.*

**பரதன் :** *ஸ்ரீராகவனை பூஜித்த புனிதனா இவர்? ஸ்ரீராமா னுஜா! நமஸ்காரபய்யா.*

**குகன் :** *ஆஹா! எனதய்யனே! பரதாழ்வானே! அபசாரம். அபசாரம். அபசாரப்பட்ட என்னை மன்னிக்கவேண்டும்.*

**சுமந்திரர் :** *பரதா! ஸ்ரீராமனை நீ எதிர்க்க வந்ததாக முதலில் நினைத்தார் குகன்.*

**பரதன் :** *ஸ்ரீராகவனை எதிர்க்க எந்த உலகத்தாரால் தான் முடியும். குகப்பெருமானே! ஸ்ரீராமண்ணாவை பார்க்க கிருபை புரியவேண்டும்.*

**குகன் :** *இதோ காத்திருக்கிறேன் தங்கள் குலத்து ஊழி யன்.*

## களம் 2. அங்கம் 12.

**லக்ஷ்மணர் :** *அண்ணா! பரதனைப் பார்த்தீர்களா! சைன்யங் களோடு நம்மை எதிர்க்க வருகிறான். பார்த்தீர்களா பரதனுடைய துரோகத்தை.*

**ஸ்ரீராமர் :**

*பாட்டு*

*ராகம் : சித்தசேனா : எவரைனலேரா : தாளம் : ஆதி.*

*பல்லவி*

*சரியோ இது சொல்வாய் லக்ஷ்மணா*
*தவறுரைப்பதேன் விதரணா* (சரி)

அனுபல்லவி

பரிசுத்த குணவான் பரதன்.
பதாரதகல் சத்ய விரதன் (சரி)

சரணம்

தாய் கைகேசியால் சாற்றிய வினையே
தாதி மந்தரையால் உற்ற போதனையே
நீ பரதன் மேல் கொண்டாய் கோபமே
நினைக்கிலஙந்தோ பரிதாபமே. (சரி)

ஸ்ரீராமர்: லக்ஷ்மணா! பரதன் நம்மை எதிர்க்கவா வருகிறான், இல்லை, இல்லை. என்பாதத்தில் மடிய வருகிறான். அப்படி பரதன் நம்மை எதிர்த்தால் தர்மாத்மாவாகிய அவனை வெல்ல என்னால் முடியுமா? அல்லது சுத்த வீரனாகிய உன்னால் தான் முடியுமா? சற்றுநேரத்தில் பார்! பரதன் நிலைமையை.

பரத சத்துருக்கனர் பிரவேசம்.

சத்துருக்னன்: ஆஹா! அண்ணா! அன்னையே! அயோத்தி அரண்மனையில், ஏழாவது உப்பரிகையில் சப்ரகூட மஞ்சலத்திலமர்ந்து சல்லாபம் அனுபவிக்கும் தாங்கள், இந்த நிர்மானுஷ்யமான காட்டில் சிறு குடிசையில் தாங்கள் வீற்றிருக்கும் கோலத்தை நாங்கள் பார்க்கும் காலமும் நேர்ந்ததே! ஐயோ! சடைமுடி—சரீரமெல்லாம் புழுதி அடைந்திருக்கிறதே! ஹா! ராகவா! ராகவா!

பரதன்: ஆர்யபுத்ரா!

ஸ்ரீராமர்: பரதா! ஏன் இந்தக் கோலங்கொண்டாய். ராஜ்யத்தில் எல்லோரும் சௌக்கியமா? தாய்தந்தை

யரை தளரவிட்டு வரலாமா. நமது குருமஹான் எல்லா நியாயங்களும் போதித்திருப்பாரே. தாய் தந்தையர் கட்டளை யிட்டது சரியல்லவென்று நினைத்தாயோ? நான் ஜேஷ்டனுகையால் சத்துவமான தவத்தை நடத்தும்படி எனக்குக் கட்டளை யிட்டார். நீ கனிஷ்டனுகையால் உலக பாரத்தை உனக்கு கட்டளையிட்டார். இதை நாம் வித்தியாசமாக எண்ணலாமா? அவர்கள் கட்டளையை மீறலாமா? அப்படி மீறினுல் அது நமது சூர்யகுலத்திற்கே குறைவல்லவா? நல்லதுனை நமது தந்தையார் என்ன சொன்னுர் அப்பா.

பரதன்: அண்ணு! தங்கள் பிறிவாற்றுமையால் சக்கிரவர்த்தியார் உயிர் விட்டார்.

ஸ்ரீராமர்: ஆஹா! தம்பி! பரதா! உனக்கு இவ்வளவு துன்பங்கள் சகிக்க நேர்ந்ததா! தந்தையார் உயிர் விடும் போது நீ என்ன துக்கத்தை அடைந்தாயோ. என்னையும் நினைந்தாயோ. சோதரா! உன்னை சோதரனுக அடைந்த தோஷத்தால் நேர்ந்த துன்பமா உனக்கிது. லக்ஷ்மணு! ஜானகி!

## வசிஷ்டர் பிரவேசம்.

ஸ்வாமி! என் தந்தையாரைப் பார்க்கும் காலமும் இனி உண்டா?

வசிஷ்டர்: ஸ்ரீராமச்சந்திரா! எழுந்திரு. விசனத்தை விடுங்கள். உன் தந்தையாரும் அறுபதினுயிரம் வருடம் அரசாண்டு களைத்தார். இனி புத்திரர்களாகிய நீங்கள் முறையே நடக்வேண்டியதை யோசியுங்கள். முதலில்

உன் பிதாவுக்குரிய நீர்க்கடனை முடித்து மேல் நடக்க வேண்டியதை கவனியுங்கள். (ஓர் புறமாக செல்கி றார்கள்.)

## அயோத்தியாவாசிகள்.

அயோத்தியாவாசி : இந்த ராகவனை திருப்பி அழைத்துவா பரதரால் எப்படி முடியுமய்யா ? மேலும் ஸ்ரீராகவன் வார்த்தைக்கு பரதன் பதில் சொல்ல முடியாமல் தவிக் கப்போகிறார். இந்த விஷயத்தில் நமது குருமகான் பிரயத்தனம் எடுத்தால்—ஒருக்கால், அதையும் திட மாகச் சொல்லமுடியாது.

வசிஷ்டர் : ஸ்ரீராமச்சந்திரா ! பரதன் தான் ஒருவனாக வந் தழைத்தால் நீ வரமாட்டாய் என்று நினைத்து நாங்கள் எல்லோரும் அழைக்க வந்தோம். இப்போது இங்கு வந்திருக்கும் யாவர்களுடைய கருத்தும் நீ மீண்டும் அயோத்திக்கு வரவேண்டுமென்னும் கோரிக்கையே. இவர்கள் வந்திருக்கும் நிலைமையினாலேயே சகலமும் தெரிந்துகொள்ளும் சக்தியுடைய உனக்கு நான் என்ன சொல்லப் போகிறேன்.

ஸ்ரீராமர் : ஸ்வாமின் ! தாங்கள் வார்த்தைக்கு நான் பதில் சொல்ல சக்தியுடையவனா ? ஆயினும் என் குல தர் மத்தை யனுஷ்டிக்கவேண்டியதவஸ்யம். நான் க்ஷத்திரி யன். முன் வைத்த காலை பின் வைக்கலாகாது. பிதிர் வாக்ய பரிபாலனமே முக்கியம். அது எதுவாயினும் சரி ! இது எனக்கு மாத்திரம் அல்ல, எங்கள் சகோ தரர் நால்வருக்கும் உரியது. இந்த நியாயம் பரதன் தெரியாதவனல்ல. ஏதோ என்மீது வைத்திருக்கும்

அளவிலா அன்பினால் சற்றுமறந்தான். தம்பி! நான் சொல்வதில் ஏதேனும் தவறுண்டா?

பரதன்: அண்ணா! தாங்கள் அவதரித்து திருநாமங்கொண்ட போதே சகல உயிர்களையும் தன் வயப்படுத்திக் கொண்ட சகல கல்யாண குணசீலரான, தங்கள் நேரில் நாயினுங் கடையனான நான் பதில் சொல்லவும் சக்தி யுண்டா? தங்கள் ஆக்ஞை எப்படியோ அப்படி.

ஸ்ரீராமர்: ஆஹா! ராகவா! நீ யல்லவோ ராகவன். உன்னை யல்லவோ ராகவனென்று கொண்டாட வேண்டும். உலகத்தில் தந்தையைக் கொன்ற என்னை ராகவனென்று சொல்லுகிறார்களே. ஏ ரகுகுலோத்தமா! நீ போய் ராஜ்யபாரம்செய், பதினான்கு வருடங்கள் கழிந்ததும் நானே வந்து உன் மனோபீஷ்டப்படி ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளுகிறேன். இதுவே என் சம்மதம்.

பரதன்: ஆக்ஞை. அண்ணா! அடியேன் விண்ணப்பமொன்று.

ஸ்ரீராமர்: சோதரா! அபீஷ்டம் என்ன? வருந்தாதே சொல்.

பரதன்: அண்ணா! தாங்கள் பதினான்கு வருடங்கள் கழித்து அயோத்திக்கு வருமளவும் நான் நந்திக்கிராமத்திலேயே தான் வசிப்பேன். அயோத்தியில் அடி வைக்கவே மாட்டேன்.

ஸ்ரீராமர்: சரி! சரி! அப்படியே உன் அபீஷ்டத்தைப்போலவே நடக்கட்டும்.

பரதன்: அண்ணா! தங்கள் திருப்பாதுகையை தந்தால் தங்கள் திருவடிகளைப்போல் சதா சேவித்துக் கொண்டிருப்பேன். அனுக்ரஹிக்கவேண்டும். அண்ணா! அன்னையே! லக்ஷ்மணா! உத்தரவா?

பரதன்: லக்ஷ்மணா! உலகத்தில் உன் பாக்கியந்தான் பாக்கியம் அப்பா.

ஸ்ரீராமர் பரதன் தர்க்கம்.

பாட்டு.

ராகம்: காபி. சாவலிபன் ஸேவாலா

ஸ்ரீராமர்:

தசரத ராஜகுமாரா, அலங்காரா, அதிதீரா, சுகுமாரா
இசை பெருகிய ரகுவம்ஸ திலகம்
எழில் பிதுர்வாக்ய பரிபாலன யோக்யம்
வசை தவிர் அதனுல் வரும பெரும்பாக்யம்
உன் மனதினில் உணர் தம்பி பரதா,
சுகபுனிதா, சத்யவிரதா, அதிரதா.

பரதன்:

கோசலை மகிழும்விநோதா, குணநீதா, ரகுநாதா, அதீதா,
தாய் செய்த வினையினுல் தமியன் நொந்தேனே
தாணியிகழும் தன்மையே யடைந்தேனே.
நேயமோடுமெதடி இனை பணிந்தேனே
நிச்சயமிது தநிவாரும், துயர்தீரும், அருள்தாரும்
[காருமே.

ஸ்ரீராமர்:

வருடமீரேழும் வனவாசத்தில் கழித்தே
வருவேனயோத்தி வளர் நகரடுத்தே
அருமை பெருகு முன தன்பினை நினைத்தே
அதி துரிதமுடனே வருவேன், அருள்புரிவேன்
ஆசிதருவேன் தவறிடேன்.

பரதன்:

உமதரும் தரிசனம் என்று காண்பேனே
உத்தமா உமைப்பிரிந்துயர் தரிப்பேனோ

அமையும் அயோத்தி மாநகர் செல்குவேனோ
ஐயோ சகியேன் என தண்ணே, அருள் கண்ணே
மணிவண்ணே என்னண்ணே.

12 வது அங்கம் முற்றிற்று.

---

களம் 2. அங்கம் 13

தண்டகாருண்ய ரிஷிகள் பிரவேசம்.

பாட்டு தர்க்கம்

பீம்பலாஸ். இந்துஸ்தானி மெட்டு

**தண்டகாரண்ய ரிஷிகள:**

ஸ்ரீரகுவம்ச திலாக்ய கண்ய பாக்ய தாதா
தசரதகுமார் ஆசிர்வாதம் ரகுநாதா.

**ஸ்ரீராமர்:**

சிலதண்டகாவனத்தில் வாழும் முனிவோர்களே
க்ஷேமமாக நீங்கள் வாழ்கிறீரோ புகல்வீர்களே.

**தண்டகாரண்ய ரிஷிகள்:**

ராக்ஷசர் செய்யுங்கோரம் நாங்கள் சகிக்கோமே
ரக்ஷித்தாளவேணும் துயரால் வருந்தினோமே.

**ஸ்ரீராமர்:**

தாட்சியின்றி நீங்கள் தவம் செய்து மகிழ்வீர்களே
சூட்சியாயரக்கரை தொலைப்பேன் அறிவீர்களே.

**தண்டகாரண்ய ரிஷிகள் :** ஸ்ரீராமப்ரபோ! தாங்கள் இந்த ஆரண்யத்துக்கு வந்திருக்கிறீர்களென்று கேள்வியுற்று சதா நாங்கள் எதிர் பார்த்திருந்தோம். அரக்கர்களுடைய ஹிம்சையை மஹரிஷிகளாகிய எங்களால் சகிக்க

முடியவில்லை. சக்ரவர்த்தித் திருமகனுகிய உங்களிடத்தில் முறையிட்டோம். இனி தங்கள் சித்தம். எங்கள் பாக்யம்.

ஸ்ரீராமர்: மஹரிஷிகளே! பிராமணர் பொருட்டும், பசுவின் பொருட்டும், தன் உயிரையும் பெரிதாய் எண்ணுமல் முன்னின்று காப்பாற்றினவன் தேவர்களிலும் மேலாவாரென்பது சத்யவாக்யம். ஆகையால் இனி நீங்கள் அரக்கர்களுக்காக அஞ்சவேண்டாம். உங்களுக்குரிய கர்மங்களை நீங்கள் தொடங்கலாம். நான் இனி அரக்கர் பேரில் நோக்கமா யிருப்பேன். விடை பெற்றுக் கொள்ளுகிறேன்.

13-வது அங்கம் முற்றிற்று.

---

களம் 2. அங்கம் 14.

பஞ்சவடி-சீதை.

மாயமான் தோற்றம்.

சீதை: நாதா! நாமித்தனை நாட்கள் இங்கு வசித்தோமே. இந்த ஆச்சர்யத்தைப் பார்த்தோமா? இதோ பொன் மயமான மான் பாருங்கள். அதை அவஸ்யம் எனக்குப் பிடித்துத் தாருங்கள். நாதா!

ஸ்ரீராமர்: ப்ரியே! பிடித்துத் தருகிறேன். சற்றுநேரம் அதனேடு விளையாடிவிட்டு பிறகு விட்டு விடு.

சீதை: அப்படியே.

ஸ்ரீராமர்: தம்பி! இங்கேயே இரு.

லக்ஷ்மணர்: அண்ணு! அந்த மான் விஷயத்தில் எனக்குநம்பிக் கையில்லை. இது அரக்கர் மாயை யென்றே தெரிகிறது.

ஸ்ரீராமர்: லக்ஷ்மணு! எப்படியிருந்தால்தான் என்ன. பார்த்து விடுவோம்.

சீதை: ஆம். ஆம். நீங்கள் சீக்கிரமாக செல்லுங்கள். இளை யவர் எப்பொழுதும் இப்படித்தான்.

லக்ஷ்மணர்: என தன்னையார் என்னை எப்பொழுதும் இப்படி சொன்னதில்லை. இதனுல் என்ன விளையுமோ தெரிய வில்லை.

மாரீசன்: ஹா-சீதா! லக்ஷ்மணு! அபயம்.

சீதை: ஆஹா! தம்பி! கேட்டீர்களா? என் ஸ்வாமிக்கு என்ன நேர்ந்ததோ தெரியவில்லையே. தீரோதாத்த குணேத்த மராகிய ரகுகுலோத்தமரும் அபயமென்று சொல்லு கிறுரே. ஆ! என் வாழ்வு இவ்வளவு தானு?

லக்ஷ்மணர்: அன்னையே! என்னம்மா? தாங்கள் ரகுநாதர் சக்தியை மறந்தீர்களா? அண்ணுவின் குறலோசை யல்ல. அண்ணு ராகவன் மூன்று உலகத்திலுள்ள சகல ஆத்ம கோடிகளுக்கும் அபயஸ்தங்கொடுத்து கார்ப்பவரே யல்லாது உலகமழிந்தாலும் அவரபயம் புகுபவரல்ல.

சீதை: தம்பி! உமது தமையனை பார்க்கபோகிறீர்களா? இதே க்ஷணத்தில் நான் உயிரை விடவா? சீக்கிரம் தெரியவேண்டும்.

லக்ஷ்மணர்: ஆஹா! அம்மா! இதோ, இதோ போய்விட் டேன் (தனக்குள்) ராகவா! ராகவா! நான் சொன்னதை

அண்ணனும் கேட்கவில்லை. அன்னையாரும்கேட்கவில்லை. அன்னையாரை நோவதில் பிரயோஜனமில்லை. அவர்கள் பெண்பாலர்தானே. ஆஹா! சூர்யகுலத்திற்கு என்ன நேருமோ தெரியவில்லை. பெரியவர்களுக்கும் விதியின் வழியே மதி செல்லுகிறது.

ராவண சந்யாஸி பிரவேசம்.

ராவணன்: நமது தங்கை சூர்ப்பனகை சொன்ன இடம் இதுதான். யாரம்மா இந்த காட்டில் தனியாயிருக் கிறீர்கள்.

சீதை: தாங்கள் யாரோ தெரியவில்லை.

ராவணன்: இந்தவனம் எங்களைச் சேர்ந்தது. நான் தபசி.

சீதை: ஸ்வாமி! நாங்களயோத்தி.

ராவணன்: சக்கிரவர்த்தியின் மக்கள் வந்திருப்பதாக கேள்வி யுற்றேன்.

சீதை: ஆம். நான் ஜேஷ்டருடைய மனைவி. என் பெயர் சீதை. என் பர்த்தாவின் பெயர் ரகுநாயகன்.

ராவணன் சீதையை அபகரித்துச் செல்லல்

சீதை: ஆ. ஹா. ராகவா! ராகவா!

14-வது அங்கம் முற்றிற்று.

## களம் 2. அங்கம் 15.

சபரி ஆஸ்ரமம் ஸ்ரீராம லக்ஷ்மணர் பிரவேசம்.

ஸ்ரீராமர்: லக்ஷ்மணா! அதோ வருபவள் தான் கபந்தன் சொன்ன சபரி மூதாட்டி போல் காண்கிறது. அம்மா! தசரதபுத்திரர்கள் நமஸ்கரிக்கிறோம்.

சபரி: ராகவா நான் வேடுவ ஜாதியில் பிறந்தவள். நான் பால்ய முதல் இதோ இந்த மதங்காஸ்ரமத்தில் மதங்க மகரிஷி யவர்களுக்கும் அவரது சிஷ்ய கோடிகளுக்கும் ஊழியம் செய்துவந்தேன். அம்மஹா முனிவர் தவம் பூர்த்தி யடைந்து சத்யலோக பலப்ராப்தியை யடைந்து சப்த சமுத்திரங்களையும் இந்த ஆஸ்ரமத்திற்கு வர வழைத்து சிஷ்யர்களோடு ஸ்நானம் செய்து, சரீரத் தோடும், சிஷ்யர்களோடும் பிரம்மலோகத்திற்குச் சென்றார். என்னை அயோத்தியில் தசரத குமாரனாகப் பிறந்த ஸ்ரீராமச்சந்திரன் ஆரண்யத்துக்கு வருவார். ஸ்ரீராம தரிசனம் செய்து திவ்ய சரீரம் பெற்று சத்ய லோகம் வருவாயென அனுக்ரஹித்தார். ஆகையால் இதோ இந்த சரீரத்தை அக்னியிலிட்டு திவ்ய ஸ்வரூபம் பெற அநுக்ரஹிப்பதோடு தங்களுக்காக அனேக நாட்களாய் சேகரித்து வைத்திருக்கும் கனி வர்க்கங்களை அங்கீகரிக்கவேண்டும்.

ஸ்ரீராமர்: அம்மா! தங்கள் அபீஷ்டம்போல் நடக்கட்டும்.

சபரி: இதோ தெரியும் ரிஷ்யமுகபர்வதத்தில் சுக்ரீவனென் னும் வானர அரசனைக்கண்டால் தங்கள் கார்யங்க ளெல்லாம் சித்திபெறும்.

(சபரி திவ்யஸ்வரூபத்துடன் விண்ணுலகம் செல்லல்.)

ஸ்ரீராமர்: லக்ஷ்மணா! சபரி மூதாட்டியின் மகத்துவத்தை பார்த்தாயா?

15-வது அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 16.

## ரிஷ்யமுக பர்வதம்.

அனுமார் : சுக்ரீவ மகாராஜனே! ஸ்ரீராமர் தம்பி லக்ஷ்மணரோடு தங்களையே தேடிவந்தனர். தங்களுக்கு நம்பிக்கை யுண்டாக்கும் பொருட்டே மராமரத்தை துளைத்துக் காட்டினார். துந்துபி எலும்பை எத்தினார். இதே க்ஷணத்தில் வாலியைக் கொன்று தங்களுக்கு கிஷ்கிந்தையை மகுடம் சூட்ட எதிர்பார்த்திருக்கிறார். வாருங்கள் போகலாம்.

* * * *

ஸ்ரீராமர் : சுக்ரீவா ! நாம் உரைத்தபடி வாலியை சம்ஹரித்து கிஷ்கிந்தையை உமக்கு மகுடம் சூட்டினோம். சுக்ரீவா ! இனி நீயும் உன்னைச் சேர்ந்தவர்களும், சீதை இன்ன இடத்தில் இருக்கிறாளென்று தேடும் உதவியை செய்யவேண்டியது.

சுக்ரீவன் : ஐயனே ! நான்கு திசைகளுக்கும் தேவியாரை தேடும் பொருட்டு சைன்யங்களை போகும்படி உத்திரவு செய்திருக்கிறது. தென்திசையை நோக்கி, ஜாம்புவரும் அனுமானும், அங்கதனும் நீலனும், இரண்டாயிரம் வள்ளம் சைன்யங்களோடு புறப்படுகிறார்கள். மற்ற திசைகளுக்கும் தலைவர்களோடும் இரண்டாயிரம் வள்ளம் சைன்யங்களோடும் புறப்படுகிறார்கள். தங்களுடைய கட்டளைக்கு எதிர்பார்க்கிறார்கள்.

ஸ்ரீராமர்: அனுமானே! நீ மஹாபுத்திமான். நீ சீதையை பார்க்கும்போதே தெரிந்து நிதானிக்கும்படியான சக்தியுடையவன். நீ சீதையை நேரில் காண்பாயானால்—

விருத்தம்.

* மாருதியே அடையாளம் சொல்வேன், கன்யாமாடத்தில் நான் கண்டதாகச் சொல்லு, வீரவில்லை ஒடித்ததையும் சொல்லு, எனைமெல்லிமனம் புரிவேனென்றுளதையும் சொல்லு, சீலைசுற்றித்தவம்பூண்டு வரும்போதென்னை துடர்ந்த காடெங்கே யென்றுளதையும் சொல்லு, நேரில் மணிமோதிரம் தந்ததையும் சொல்லு, நினைந்து நினைந்துருகுவதையும் சொல்லு.

ஸ்ரீராமர்: மாருதி! சீதையைக்காண்பாயாகில் இந்த அடையாளங்களைச் சொல்லு. மிதிலையில் சீதையைக் கன்யாமாடத்தில் முதலில் நான் கண்டேன். வில்லை முறிக்கும்போது ஜானகி நான் இவரையே மணம்புரிவேனென்று தன் சேடிமார்களிடம் சொன்னாளாம். அயோத்தியை விட்டு காட்டிற்குப் புறப்படும்போது தானும் மரவுரிதரித்து என்னோடுவரும்போது அயோத்தியின் கோட்டை வாயிலைக் கடவாமுன்னமே, நாதா! காடெங்கே என்று கேட்டாள். அதை அடையாளமாகச்சொல்லு. இன்னமும் நானும் சீதையும், சம்பாஷித்த வார்த்தைகளெல்லா முனக்கு சொல்லியிருக்கிறேன். அதையும் ஞாபகப்படுத்தி சொல்லி இந்தக்கணையாழியையும் கொடு. அப்பொழுதுதான் உன்னை நம்புவாள்.

---

* தி. நாராயணசாமிப்பிள்ளை ராமநாடக விருத்தம்.

(வானரசைன்யங்கள் செல்கின்றன.)

ராகமாலிகை விருத்தம்.

* ஸ்ரீகல்யாணகுண ஜானகிசகி
சித்தமோகன சுந்தராங்கி என்னை
ஸ்ரீராகவா என்றென்னை தேடுகின்றாயோ
திவ்யசத்குண சப்ததன்யாசி ராகப்ரியை
சீதா சாமார்த்தியமாய் அநக அரக்கனை
ஜெயிக்கேன் கையில் சாரங்கமேன்
ஸ்ரீலோஹித வனசாவேரி ரஞ்சனி
ஜெயபூபால ஜெனகதபோமணி
என்னிருகண்மணி சீதாங்கனி.

பாட்டு.

ராகம்: மலையமாருதம் ஜென்மமெந்துக்கு. தாளம்: ஆதி

பல்லவி

என்றன்கண்மணி என்றன்பெண்மணி
எங்குசென்று நீ ஏங்குகின்றாயோ.

அனுபல்லவி

அன்றிலைப்போல் என்னை என்றும் பிரியாளே
ஐயோ பிரிந்தாளே ஆசைகண்ணாளே.

16 வது அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 17.

## இலங்கை நகர்.

அனுமார் :

பாட்டு.

ராகம் வேதவாகினி சல்லகளுதோ தாளம் ஆதி

பல்லவி

அன்னையைக்காணு, தயர்கின்றேனே
அடைந்த துயரால், ஆவிநொந்தேனே. (அன்)

---

* தி. நாராயணசாமிப்பிள்ளை ராமநாடக விருத்தம்.

அநுபல்லவி

பன்னரும்ரவிகுல, பாக்ய ரகுராமா
பாவி யென்மனம், நொந்து பதறிடலாமா. (அன்)

சரணம்

இலங்கைநகரினில் எங்கும்ஓடி
ஏகினேன் என்தாய் சீதையைத்தேடி
நிலைகுலைந்தலைந்தே நிற்கலானேனே
நினைக்க நினைக்க எந்தன் இதயங்கலங்கினேனே.(அ)

அனுமார் : நாமிந்த இரவெல்லாம் இலங்கை முழுமையும் தேடினோம். எனதன்னையை மாத்திரம் காணவில்லை. ரகுநாயகன் காரியமாகவந்த எனக்கு பிராட்டியாரை மாத்திரம் காண்பேனாகில் என் ஸ்ரமமெல்லாம் மாறி விடுமே. கடலை தாண்டிவந்தும், தேவியை காணமற் போனால் சுக்ரீவமகாராஜனுக்கு என்ன சொல்வேன். ஐயோ! ராமசந்திரன் என்னை என்ன நினைப்பாரோ. அனுமான் போனவன் பிராட்டியைக்கண்டு வருவா னென்று அதி ஆவலோடு எதிர்பார்த்திருப்பாரே. ரகு குலோத்தமா! இனி உன் கிருபையால் கண்டால் தானுண்டு. அதோ ஒரு சோலை தெரிகிறது. அங்கும் சென்று பார்க்கிறேன். அங்கும் அன்னையைக் காணா விடில் இந்த இலங்கையை அரக்கர்களோடு பேர்த்து கடலில் எறிந்து செல்கிறேன்.

அசோகவனம்.

அனுமார் : ஆஹா! இவர்கள்தான் எனதன்னையார். கண் டேன் கண்டேன். இந்த சோலையின் மரத்தின் மறை வில் மறைந்திருந்து உண்மையறிவோம்.

சீதை : அம்மா ! திருச்சடாதேவி ! தங்களுடைய உதவியாலும் அமிர்த மொழிகளாலும் மனம் பொறுத்திருக்கிறேன். என் நாயகரைவிட்டுப் பிரிந்த என் உயிர் அப்போதே என் உடலைவிட்டு நீங்கியிருக்கும். எனதன்னாய்! நான் மறுபடியும் என் பிராணபதியைக் காண்பேனோ ? ஹா ! ராகவா !

திரிச்சடை : அம்மா ! தாங்கள் கவலைப்படவேண்டாம் நேற்றிரவு நான் கண்ட சொப்பனத்தினால் தங்கள் பர்த்தாவினிடமிருந்து சுபசேதிகள் வருமென்று நினைக்கிறேன். இந்த ராவணன் எண்ணெயை சிரசிலிட்டுக் கொண்டு, தென்திசையை நோக்கி சென்றதாகவும், ராவணன் வீட்டிலிருந்து ஓர் சுந்தரவதி என் தகப்பன் வீட்டிற்குள் புகவும், தங்களுடைய பதி ராவணனைக் கொன்று தங்களை மீட்டுக்கொண்டு உயர்ந்த யானையின் பேரில் தாங்களும் தங்கள் பர்த்தாவும், ஆரோஹணித்து அயோத்திக்குச் செல்லவும் கண்டேன். ஆதலால் தங்களுக்கு அதிசீக்கிரத்தில் சகல நன்மைகளும் உண்டாகப்போகிறது. கவலைவேண்டாம்.

ராவணன் பிரவேசம்.

ராவணன் : சீதாங்கனி! என்பிரிய நாயகி? இன்னும் என் பேரில் மனமிறங்கவில்லையா? அற்பமனிதனாகிய ராமனை மறந்து விடு. என்சொற்படி கேட்பாயாகில் இந்த இலங்கையை உனக்கு மகுடம் சூட்டுகிறேன், தயவு செய்.

சீதை : அடே பாவி ! இந்த துரும்புக்கு சமானமானவனே, என்னை யாரென்று நினைத்தாய் ; தர்மாத்மாவாகிய ஸ்ரீ

ராகவன் மனைவியடா; நானிந்த இடத்தில் இருப்பதை தெரிந்தால் தசரத புத்திரர்களாகிய அந்த நரசிம்மங்கள் வந்து உன்னையும் உன் இலங்கையையும், உனது சைன்யங்களோடு, நாசப்படுத்தி என்னை மீட்டுக் கொண்டு போவார்கள். என் நாதன் ஏதோ காட்டில் தவக்கோலங்கொண்டு வந்திருக்கிறானென்று நினையாதே. அவர் நினைத்தால் கண்மூடி திறப்பதற்குமுன் உன் இலங்கை மண்மூடிப்போய்விடும். நினைத்துப்பார். உன் சகோதரர்களான கரதூஷண திரிசிரர்களோடு பதினாலாயிரம் அரக்கர்களும் என் பர்த்தா அம்புக்கு ஒரே க்ஷணத்தில் மடிந்தார்கள். அதே கெதிதான் உனக்கும். நீ பிழைக்க எண்ணமிருந்தால் என்னைக்கொண்டு போய் ரகுநாயகனிடம் விட்டு நீயும் சரணாகதியடை. அடைந்தால் நீயும் இலங்கையும் பிழைக்கலாம்.

**ராவணன் :** இன்னும் ஒரு மாதத்திற்குள் இணங்காவிட்டால் உன்னைக்கொன்று தின்று விடுவேன்.

**சீதை :**

பாட்டு.

ராகம் : கன்னடகௌளா-ஒரெகுபுக. தாளம் : ஆதி.

பல்லவி

தீனநாதனே திவ்யபோதனே
தீர உத்தமகுண நீதனே (தீன)

அனுபல்லவி

நானுனது பாதமலர் நம்பினேன்
நடுங்குந்துயரால் மனம் வெம்பினேன் (தீன)

சரணம்

உமையன்றி வேறு உற்றதுணையாரு
உரைசெய்யவேண்டும் உத்தமா இனி
தாமதித்திடாதருள் தாயகனே
சரணம் ரகுகுல நாயகனே (தீன)

**சீதை:** ரகுநந்தனு! நான் பெண் புத்தியினுல் தங்களைப்பிரிந்தேன். என் ப்ராணபதி என்னை எங்கெங்கு தேடினுரோ! ஏதவஸ்தை பட்டாரோ. பாபி என்னுலல்லவா? இளையவரை கடிந்து பேசின தோஷந்தான் இது. இந்த சிறையில் நான் படும் கஷ்டங்களுக்கு காரணம் இளையவர் ஸ்ரீராமதாச கைங்கர்ய பரமபாகவத சிகாமணியல்லவா? பாகவதாபசாரம் யாரைத்தான் விடும். இனி நான் உயிர் வைத்திருப்பதில் பிரயோஜனமில்லை. இதோ இந்த சிம்சுபா விருக்ஷத்தின் கிளையில் என் கூந்தலை மாட்டிக்கொண்டு பிராணனை விடுகிறேன். ஏ ராகவேந்திரா! உலகமெல்லாம் கொண்டாடும் உம்மை பர்த்தாவாக அடைந்த எனக்கு இந்த பாபி ராவணனுடைய பூமியிலேயே என் ஜீவன் முடிய நேர்ந்தது. ரகுகுலோத்தமா! ராகவா! ராகவா!

அனுமான் பிரவேசம்.

**அனுமார்:** ஆஹா! அம்மா! அடியேன் ராமதூதன், ராம தூதன், ராமதூதன்.

**சீதை:** இதென்ன ஆச்சர்யம்! இதுவும் அரக்கன் மாயை தானே. இருந்தாலும் ரகுநாயகன் திருநாமத்தை கர்ணமிர்தமாக பொழிந்தான். ஆகையால் விசாரிப்போம். ஐயா! தாம் யார்! விவரமாய்ச் சொல்லவேண்டும்.

அனுமார் : அன்னையே! தங்களை பாபி ராவணன் கொண்டு வந்த பிறகு, இளையவரால் தெரிந்த ரகுநாயகன், பலவாறாய் பிரலாபித்து, ஜடாயுவினால் சவிஸ்தாரமறிந்து, கபந்தனைக்கொன்று, சபரியென்னும் தவமாதைக்கண்டு, அம் மாதாவால் எனதரசனாகிய சுக்ரீவ மகாராஜனை நேசித்து, அவர் தமையன் வாலியை ரகுநாயகர் கொன்று சுக்ரீவ மஹாராஜனுக்கு கிஷ்கிந்தையை மகுடம் சூட்டி, எங்களையும் அடிமை கொண்டாரம்மா. என்னைப்போல் அநேக மாயிர மாயிரக்கணக்கான வானர சைன்யங்களை நான்கு திக்குகளிலும் சென்று உலகமெல்லாம் தங்களைத்தேடும் பொருட்டு எங்கள் சுக்ரீவ மஹாராஜன் அனுப்பியிருக்கிறார். நான் தென்திசையை நோக்கி வந்தவர்களில் ஒருவன். என்பெயர் அனுமான். நான் வாயுவுக்கு பிறந்தவன். என் தாயார் பெயர் அஞ்சனாதேவியம்மா.

சீதை: ஆனால் ரகுநாயகனிடமிருந்து வந்தாயானால் அவர் திருமேனி எப்படி இருக்கும் சற்று சொல்லலாமே?

அனுமார்: அன்னையே? ரகுநாதனின் வனப்பை சொல்ல எவராலுமுடியுமோ? ஆயினும் என்னால் தெரிந்தமட்டும் சொல்லுகிறேனம்மா.

அனுமார்: அந்த ரகுகுலோத்தமரின் சந்திர பிம்பத்தை போன்ற முகமும், காவி மலரைப் போன்ற இரண்டு நேத்திரங்களையும், கண்டவர்கள் உலகத்தில் மற்றொன்றைக்கண்டு மகிழ்வார்களா? எனதய்யனின் அழகிய திருமார்பும் பர்வதாகாத்ரமான புஜங்களும், யானையின் துதிக்கைக்கொப்பாகிய கோதண்டக்காய்ப்பேரியநீண்ட

காரங்களைக்கண்டால் தன்னை எதிர்க்க நினைத்திருக்கும் சத்ருக்களும் சரணாகதி அடைந்து நேசிக்க நினைப்பார்களே தாயே. என் ஸ்வாமியின் ஸ்யாமள சொரூபமும் மந்தகாச நடையும் அழகிய புன்சிறிப்பும் கண்டநானிப்போது இங்கு நினைத்தாலும் என் மனதிலோர் இன்பம் ஜெனிக்கிறதே தாயே. அவரது மன்மதாகார கோமள சரீரத்தில் சாமான்ய மரவுரி என்ன பெருமையடைகிறது—லோகநாயகனின் காருண்யசித்தம் தங்கள் திருவுள்ளம் அறியாததா? இன்னும் அடையாளங்களும் சொல்லியிருக்கிறார். அடையாளமும்கொடுத்திருக்கிறார் தாயே.

சீதை: ஐயா அனுமானே! என்ன அடையாளங்கள் சொன்னார்.

அனுமார்: அன்னையே! ரகுநாயகன் மிதிலையில் முதலில் கன்யாமாடத்தில் தங்களைக் கண்டாராம். வில்லைமுறிக்கும்போது தாங்கள் சேடிமார்களிடம் "நான் இவரையே மணம் புரிவேன்" என்று சொன்னீர்களாம். காட்டிற்கு வரும்போது அயோத்தியின் கோட்டைவாயிலைக் கடவா முன்னமே "நாதா காடு எங்கே" என்று கேட்டீர்களாம். பின்பு காட்டில் வசிக்கும்போது ஒருநாள் ரகுநாயகன் மடியில் தாங்கள் சிரம்வைத்து நித்திரை செய்தீர்களாம். தாங்கள் நித்திரையிலிருக்கும்போது மலையின் தாதுக்களான கற்சங்கப் பொடியை தங்கள் திருமுகத்துக்கு பொட்டிட்டு அழகைப்பார்த்து களித்தாராம். பிறகு தாங்கள் விழித்ததும் தங்களுக்கு ரகுநாதர் சொன்னாராம். இது தங்களுக்கும் ரகுநாதருக்

கும் தான் தெரியுமாம். இவை யெல்லாம் அடையாள மாகச் சொல்லி இந்தகணையாழியையும் கொடுத்தாரம்மா. (சீதை அக்கணையாழியை கண்களிலும் சிரத்திலும் ஒத்திக்கொண்டு)

**சீதை:**

பாட்டு

ராகம். ரீதிகௌள. தாளம்: ஆதி

பல்லவி

சத்குரு ஸ்வாமிக்கு சமான மில்லையென
சந்ததமும், மனதில் உணர்ந்திடுவாய் அனுமானே (சத்)

அநுபல்லவி

சித்குண கன்யனை செழிக்கும் லாவண்யனை
சிறந்த நற்புண்யனை நிறைந்த ஜீவகாருண்யனை (சத்)

சரணம்

திருமணம் நடந்த பின் தந்தை சொற்படி
திகழ்வனமேகும் வழியில் கெங்கைக்கரையில்
அருமைக்குகனை நேசித்தே அடவிசென்று
அருந்தவர்க் கபயமளித்து காகாசுரன்
ஒருகண்ணைபோக்கி விராதனை வதைத்து
ஒட சூர்ப்பனகையை பங்கம் செய்து
சமரில் நிருதர்களிறந்தபின் மாரீசனோடிட
அதனை ஈந்தருளென வேண்டவிலகி யகன்ற (சத்)

அனுமானே! இவ்வளவும் சரி. இந்தக் கடலை எப்படி அய்யா தாண்டி வந்தாய்.

**அனுமார்:** அன்னையே! அநேக நாட்களாய் சிறகெறிந்து கிடந்த சம்பாதிக்கு ஸ்ரீராமமந்திரத்தால் சிரகுவளர்ந்த தென்றால், அவர் ஏவலாகவரும் எனக் இந்த கடல் எம்மாத்திரம் தாயே. விஸ்வரூபமெடுத்து வந்தே னம்மா.

சீதை : ஆனால் நான் காணலாமோ ?

அனுமார் : அப்படியே ஆக்ஞை.

### விஸ்வரூபத் தோற்றம்.

சீதை : வாயுபுத்ரா ! 'முன்போலவே ஆகவேண்டும். இன்று உன்னைக்கண்ட நான் இன்னும் ஒரு மாத பரியந்தம் உயிரோடிருப்பேன். இதற்குள் ரகுநாயகனே வந்து என்னை சிறை மீட்காவிட்டால், நான் கட்டாயம் உயிர் விடுவேன். இது ரகுநாயகன் திருவடி சாக்ஷியாக சொல்லும் வார்த்தை. இளையவருக்கு என் ஆசீர் வாதம் சொல்லி அன்று தமையன் சொற்படி என்னைக் காத்ததுபோல், இப்போது சிறை மீட்பதும் அவர் பாரமென்று சொல்லவும். இன்னும் சுக்ரீவ மஹாரா ஜரையும், வானரசைன்யங்களையும, நான் க்ஷேமத்தை விசாரித்ததாக சொல்லவும். இந்த சூடாமணியையும், ரகுநாயகரிடம் கொடுக்கவேண்டும். நீ சிரஞ்சீவியாய் வாழ்வாய்.

17-வது அங்கம் முற்றிற்று.

---

### களம் 2. அங்கம் 18.

ஸ்ரீராமர் : சுக்ரீவா, போன அனுமான் வராததுபற்றி என்ன யோசிக்கிறாய் ?

சுக்ரீவன் : அய்யனே ! அனுமான் ஒரு காரியத்திற்குப்போ னால் அபஜெயமென்பது இதுவரையிலும் கிடையாது.

அனுமான் பிரவேசம்.

அனுமார்: கண்டேன், கண்டேன், என தன்னையாரைக் கண்டேன். கற்பின் பூஷணத்தைக் கண்டேன். இலங்கையில் அசோக வனத்தில் அன்னையை என் கண்ணாரக் கண்டேன். அன்னையார் கொடுத்த சூடாமணி இதோ.

ஸ்ரீராமர் : மாருதி! ஜானகி என்ன சொன்னாள்.

அனுமார் : இலங்கை முழுவதும் தேடிப் பிறகு அசோக வனத்தில் கண்டேன். அன்னை பிராணனை மாய்த்துக் கொள்ளத் துணியும் சமயத்தில் நான் சென்று அடையாளங்கள் சொல்லி கணையாழியையும் தந்தேன். அன்னையார் துக்கித்ததல்லாமல் இன்னும் ஒரு மாதத்தில் ரகுனாதரே வந்து சிறைமீட்கவேண்டுமென்று சொல்லச் சொன்னார்கள். இளையவருக்கு ஆசிர்வாதம் சொல்லி சிறை மீட்பது அவர் பாரமென்று சொல்லச் சொன்னார்கள். சுக்ரீவ மஹாராஜாவர்களையும் வானரச் சைன்யங்களையும், க்ஷேமம் விசாரித்ததாக சொல்லச் சொன்னார்கள்.

விபீஷணர் : ராமசந்திரப்ரபோ! அபயம். அபயம்.

ஸ்ரீராமர் : யாரது—பாருங்கள்.

சுக்ரீவன் : அய்யனே ராவணன் தம்பி விபீஷணனும், சரணாகதியடைய வந்திருக்கிறார்.

ஸ்ரீராமர் : உங்கள் உத்தேச மென்ன.

சுக்ரீவன் : அய்யனே ! எதிரியின் சகோதரனல்லவா.

ஜாம்புவர் : ஆம். ஆம்.

அனுமார் : ஸ்வாமின்! இந்த விபீஷணர் அந்த இலங்கைக்குள் இவர் ஒருவரே உத்தமர். ராவணன் என்னைக் கொல்லும்படியாக ஆக்ஞை செய்தான். தூது வந்தவரை கொல்லலாகாதென்று அநேக தர்ம நியாயங்களை எடுத்துச் சொன்னார். இவர் மகளாகிய திருச்சடையம்மனைக்கொண்டு, அன்னையாருக்கு அடிக்கடி தைர்ய வார்த்தைகளைச் சொல்லச் செய்திருக்கிறார். ராக்ஷசர் உளவறிந்த இவர் நமக்கிருக்கவேண்டிய தவஸ்யமே.

ஸ்ரீராமர் : நல்ல யோசனை. இந்த விபீஷணனே அல்ல, அந்த ராவணனே வந்து சரணமடைந்தாலும் அவனையும் ரக்ஷித்து நமது குல தர்மத்தை ஸ்தாபிக்க வேண்டியது தான் அவஸ்யம். ஆனதால், (சுக்ரீவனை நோக்கி) நீயே போய் விபீஷணனை அன்போடு அழைத்துவா.

விபீஷணர் பிரவேசம்.

விபீஷணர் : ரகுநாயகா! அபயம். அபயம். இனி தாங்களே எனக்கு மாதா, பிதா, குரு, தெய்வம். இனி தங்களையல்லால் வேறு கெதியில்லை.

ஸ்ரீராமர் : விபீஷணா! உனக்கு அபயஸ்தம் கொடுத்தேன்; ஆதரிக்கிறேன். உன்னை ஒருபோதும் கைவிடமாட்டேன். என் தந்தையாருக்கு ராம பரத லக்ஷ்மண, சத்ருக்னனென்று நான்கு புத்திரர்கள் பிறந்தோம். குகனோடும் சுக்ரீவனோடும் உன்னோடும் நாம் ஏழுபேர் சகோதரராகவென்று உலகமுள்ளளவும் சொல்லும்படியாக, தீர்மானித்தேன். உத்தமனாகிய உன் தர்ம நீதிகளை கேளாத அந்த ராவணனை சம்ஹரித்து அந்த இலங்கையை உனக்கு மகுடம் சூட்டுவோம். அஞ்

சாதே. மேலுமென்னைப் பிரிந்து தவிக்கும் ஜானகிக்கு உன் மகள் திருச்சடை யம்மனைக்கொண்டு தைர்யம் சொல்ல செய்த உன் பேருதவியை நான் மறக்கக்கூடியதோ? லக்ஷ்மணு! சுக்ரீவா, ஜாம்புவரே, நீலமாருதிகாள், அனைவரும் கடற் கறைக்குச் சென்று, வருணனைக் கொண்டு சேதுகட்டி லங்கைக்குச் செல்லவேண்டும்.

விபீஷணர்: ஸ்வாமி! தங்கள் முன்னோராகிய சகரர்கள் வெட்டியதால் தான் அதற்கு சாகரமெனப் பெயராயிற்று. ஆகையால் அப்படித்தான் செய்ய வேண்டும்.

18-வது அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 19.

## போர்க்களம்.

விபீஷணர்: ஸ்வாமி! இந்த ஸ்வேல மலையிலிருந்துக் கொண்டே இன்னும் யுத்தத்திற்கு வருபவர்களை வதம் புரியலாம்

ஸ்ரீராமர்: விபீஷணு அதோ காத்ரமான சரீரத்தோடு யுத்த சன்னத்தனுய் வருபவன் யார்?

விபீஷணர்: இவன் கும்பகர்ணன், ராவணனுக்கு இளையவன் எனக்கு மூத்தவன். இவன் தேவர்களை யெல்லாம் புறமுதுகுகாட்டி அடித்தவன். இவனோடு நாங்களே யுத்தம் செய்யவேண்டும்.

ஸ்ரீராமர்: மிகவும் சந்தோஷம். அதி புத்திமானுகிய உன் வார்த்தையே சத்யமானது.

கும்பகர்ணன் பிரவேசம்.

கும்பகர்ணன்: ராமா! நீ அநேகரை ஜெயித்திருக்கலாம். என்னோடு யுத்தம் செய்து பார். (ஸ்ரீராமர் அம்புக்கு கும்பகர்ணன் மடிகிறான்).

ராவணன் பிரவேசம்.

ராவணன்: ஹே! ராமா! அநேகரை கொன்றோமென்று நினைத்து முன்போல் அஜாக்ரதையாய் இராதே. இந்த பாணத்திற்கு தப்பிக்கும் மார்க்கத்தைத் தேடு.

ஸ்ரீராமர்: அப்படியா! விபீஷணா! என்ன இன்னும் இவ்வளவு இருமாந்து பேசுகிறான்.

விபீஷணர்: ஸ்வாமி! இவன் மார்பில் அமிர்தகலச மிருக்கிறது. அதை வெளிப்படுத்த வேண்டும். (ஸ்ரீராமர் ஓர் அம்பு எய்ய ராவணன் மடிகிறான.)

19-வது அங்கம் முற்றிற்று.

---

களம் 2. அங்கம் 20.

ஸ்ரீராமர்: ஜானகி! உன்னை அக்னிப்ரவேசம் செய்வித்ததற்காக வருந்தாதே. இதன் உண்மை உலகம் அறிய வேண்டு மல்லவா.

சீதை: நாதா! தங்கள் முன்னிலையில் எனக்கு எவ்வளவு கஷ்டங்கள் நேர்ந்தாலும், நான் சகிப்பேன். தங்களைப் பிரிந்து மாத்திரம்—

ஸ்ரீராமர்: வேண்டாம்—ஜானகி! இன்னும் ஏன் கவலைப்படுகிறாய்.

ஸ்ரீராமர்: சோதரர்களே! எல்லோரும் சேர்ந்து நமது அயோத்திக்குச் செல்லுவோம்.

விபீஷணர்: ஸ்வாமி! புஷ்பக விமானமிருக்கிறது. அதில் ஆரோகணித்துச் செல்லுவோம்.

20-வது அங்கம் முற்றிற்று.

## களம் 2. அங்கம் 21.

### நந்திக்கிராமம்.

**பரதன்:** *சுவாமின்! என் தமயன் சொன்ன பதினான்கு வருடங்களும், நேற்றோடு முடிந்தன. இன்று நான் இன்னும் உயிரோடிருப்பது சரியன்று. நான் தங்களிடம் அன்று சொன்னதுபோல் அக்கினியில் விழுந்திறப்பேன்.*

**வசிஷ்டர்:** *வாருதி நீர் பொய்த்தாலும், சோமரவி பொய்த்தாலும் சொன்னசொல் தவறமாட்டான் ஸ்ரீராமன்.*

ஸ்ரீராம, லக்ஷ்மண, சீதை, அனுமான் முதலியோர் பிரவேசம்.

**ஸ்ரீராமர்:** *தம்பி!*

**பரதன்:** *அண்ணா!*

*விருத்தம்*

* *தண்ணாரமுதே தனிமுதலே சதுர்மாமறையின் அரும் பொருளே.*
*கண்ணார்மணியே மணிஒளியே கருணைக்கடலே கற்பகமே*
*விண்ணார்சுடரே சுடர்மயமே வியன்முக்கனியே கனிரசமே*
*அண்ணா, எனதண்ணா, அடியேன் பரதன் அடிபணிந்தேன்.*

*விருத்தம்.*

**ஸ்ரீராமர்:**

* பூமாதிலகும் புயத்தரசே புகழே சுகுணபூஷணமே
தேமாங்கனியே, திருவுருவே, செல்வத்துரையே
ஜெகம்புறக்கும், கோமான் மகனே என்னருமைக்
குழந்தாய் பரதா நீவருந்தலாமா இதுமுறைமை யாமா
தம்பி யாடா தம்பி பரதா.

**ஸ்ரீராமர்:** இனியாகிலும் என் தம்பி பரதனுக்கு மகுடம்சூட்டி அவனுக்கு உதவியாயிருக்கலாம் என்று எண்ணுகிறேன்

---

* தி. நாராயணசாமி பிள்ளை ராமநாடக விருத்தங்கள்.

வசிஷ்டர் : ராமசந்திரா ! பாதநிலைமையப்பா. மேலும் ஜேஷ்டனிருக்க கனிஷ்டனுக்கு முடிசூட்டுவது நமது சூர்யகுலத்திலுண்டா.

ஸ்ரீராமர் : தங்கள் வாக்கியத்தை என் மாதா வாக்கியமாக கொண்டேன்.

வசிஷ்டர் : வாருங்கள் போகலாம்.

## இடைக்காட்சி.

இந்துஸ்தானி மெட்டு : ராகம் : பாண்டு.

நாரதர் பாட்டு.

நல்லோர் மகிழுவாரே நலமெய்தியே வாழ்குவாரே
பொல்லாங்கடைந்திடாரே, புகழே மிகப் பேறுவாரே
வல்ல அரக்கர்பட்டார் வலிகுன்றி ஆவிவிட்டார்
தொல்லைவினையினாலே துலைந்தார் துயரினாலே
காரண காரியசீலன் கர்த்தன் மறையின் மூலன்
நாரணன் பாதசாக்ஷி நல்லோர் மனமத்தாக்ஷி
எல்லாம் அவன் சொரூபம். எல்லாமவன் ப்ரதாபம்
எல்லாமவன் ப்ரகாசம் எல்லாமவன் விகாசம்
அவனே உலகின் நாதன் அவனே பெரும் ப்ரபோதன்
அவனே லக்ஷ்மி சமேதன், அவனே நளின பொற்பாதன்
(நல்லோர்)

21-வது அங்கம் முற்றிற்று.

---

## களம் 2. அங்கம் 22.

## ஸ்ரீராமர் பட்டாபிஷேக வைபவம்

பாட்டு.

ராகம் : பௌளி. லெம்மூலெம்மூ மெட்டு. தாளம் : ரூபகம்.

எல்லோரும் :

பல்லவி

வாழ்க, வாழ்க ! வாழ்குவீரே,

அநுபல்லவி

வாழ்க, வாழ்க, வாழ்க அகிலம்
வாழ்க, வாழ்க, வா ரகுகுலம்
வாழ்க ஜானகி ராகவன்
வாழ்க லக்ஷ்மண பரதனோடு
வருசத்ருக்னன் முதலோர் (வாழ்க)

சரணம்

வேதம் வாழ்க ஆகமவிதபுராணம் வாழ்கவே
போத முனிவரர் சுர பூசரர் பொங்கி வாழ்கவே
நீதிவேட ராஜகுகன் ஜெயமுகு ஆஞ்சநேயன்
பேதமிலா சுக்ரீவாங்கதவிபீஷணர் மகிழ்வுபெருகி(வா)

22-வது அங்கம் முற்றிற்று.

---

## களம் 3. அங்கம் 1.

## கோகுலம்

## ஸ்ரீ பலராம கிருஷ்ணாவதாரம்

**கிருஷ்ணன் :** அண்ணா இதுவரை நாமிந்த கோபாலர்களுடன் கூடி சுகமனுபவித்து வந்தோம். நாமிங்கிருப்பதை யறிந்து, நமக்கு கெடுதல் விளைவிக்க வேண்டுமென்ற எண்ணங்கொண்ட கம்சன், பூதகி, சகடாசுரன் முதலானவர்களால் எத்தனையோ ஆபத்துகளை உண்டு பண்ண, அவைகளெல்லாம் தெய்வகதியால் விலகின.

**பலராமர் :** ஆம். எல்லாம் ஈஸ்வர ப்ரசாதமே.

**கிருஷ்ணன் :** இப்போது அந்த கம்சன் தனுர்யாகம் என்றும், அதற்கு நாமங்கே வரவேண்டுமென்றும் தாதா அக்ரூரரை அனுப்பியிருக்கிறான்.

பலராமர் : கிருஷ்ணு! தனுர்யாக மென்பது கபடமான காரியம். அக்ரூரரும் கபடமாக விருக்கிறதென்றே சொல்லுகிறார்.

கிருஷ்ணன் : எப்படியானுலும் சரி, அக்ரூரர் சொற்படி நாம் அவ்விடம் சென்று அந்த தனுர்யாகமென்னும் காரணத்தைக் கொண்டே, கம்சனை சம்ஹரித்து தாதா உக்ரசேன மஹாராஜாவுக்கு பட்டங்கட்டி, நமது மாதா பிதாக்களை சிறைமீட்டு தரிசித்து அவர்களை சந்தோஷப் படுத்தவேண்டும்.

பலராமர் : கோபாலா, நீ சொல்வது உசிதமே. ஆனுல் அந்த துஷ்டனுடன் எப்படி யுத்தம் செய்வது.

கிருஷ்ணன் : அண்ணு! எல்லாம் ஈஸ்வரக்ருபையால் அனுகூலமாகவே முடியும். இவ்விடமிருக்கும் கோபிகைகளையும் கோபாலர்களையும், தாயார் யசோதை அம்மாளையும், தகப்பனர் நந்தகோபர் இவர்களை சமாதானப் படுத்தி நாம் நாளை மதுரைக்குப் போய் வருவோம்.

பாட்டு.

இந்துஸ்தானி மெட்டு.

நாமே மகிழ்வாக செல்குவோம் விரைவோடு
நகரமடைந்திடுவோம் குதூஹலமோடு (நாமே)
பூமியிலே பகை களைந்திடுவோமே
பொங்கிடும் தர்மமே புரிந்திடுவோமே
புறப்படுவோமே (நாமே)
தாமதமே செய்யதான் முடியாதே
தருணமிருவரும் தொடர்ந்து இப்போதே
தான்போக தடையினியேதே (நாமே)

1-ம் அங்கம் முற்றிற்று.

களம் 3. அங்கம் 2.

## ஸ்ரீகிருஷ்ண லீலை.

இந்துஸ்தானி மெட்டு.

### கிருஷ்ணன் கோபிகள் தர்க்கம்.

கிருஷ்ணன் : கோமளமே நீ தயவு கூறடிமானே
கோபம் விடுத்தே மகிழ்வாய் செழுந்தேனே

கோபிகை: போமினியெம்மோடொருசொல்புகன்றிடலாமா
பொய்யுரை செய்வோருறவு கொள்ளவும்போமா

கோபிகை: வெகு எத்துவித்தைக்காரனென இன்றறிந்தேனே
ஏமாற்றுவதில் தீரனெனவே உணர்ந்தேனே

கிருஷ்ணன் : பத்தினியே புத்தமுதே பகைமை ஏனடி
பாக்கியமே சிலாக்யமே பகருவாயடி

கிருஷ்ணன் : வேல்விழியே பால்மொழியே விவித சிங்காரி
வேண்டினேன் என்னோடிங்கு வா யலங்காரி

கோபிகை :
ஏதுபசார மொழியானறிவேனே
எய்க்குங்குண யோக்கியனென்றே தெரிவேனே

கோபிகை :
என் கணவன் கோபமுள்ளார் என்றறியீரோ
இது தெரிந்தால் அவருமை அவமதியாரோ

கிருஷ்ணன் :
பொன்னெழில் மேனி மலர்க்கண் பொருந்திய பாவாய்
போர்மதனாலே மெலிந்தேன் காத்திடு பூவாய்

கிருஷ்ணன் :
அந்தமுள்ளபைந்தொடியே அழகிய நாரி
ஆதரவாய் நீ தயவாய் ஆள்வாய் ஒய்யாரி

கோபிகை :
இந்தவித தந்திரத்தால் எமை மயக்காதீர்
இனிய மொழியாலெனை ஏய்க்க நினைக்காதீர்.

**கோபிகை :**

பேதை யென்முன் வாதுசெய்தால் பிரபலமாமா
வெகு பெம்மாத்துக்காரென்பதை இனி மறப்போமா

**கிருஷ்ணன் :**

காதலியே நீ தயவாய் கார் மடமயிலே
கோதிலாத கீதரச குறலுள்ள குயிலே

பாட்டு.

இந்துஸ்தானி மெட்டு.

கிருஷ்ணன் :

கண்ணான கண்மணிகாள் ஆ எந்தன் (கண்)
என் காதலிகாள், காருண்யவதிகாள் வாருமென் (கண்)

கோபிகை:

எமது மனோகர இனிய சிங்காரரே
இலகு நீலமேனி யலங்காரரே

கிருஷ்ணன்:

என் காதலிகாள், காருண்யவதிகாள் வாருமென் (கண்)
கருதும் வசீகரியே, கனகசரீரியே
கான மோகனமே, கண்பாரன்னமே (கண்)

கோபிகை:

நற்காலமிதே, கலந்தக மகிழ்ந்தே கூடிட
கண்ணாளரே வருவீர் ஆ எங்கள் கண்ணாளரே வருவீர்

2-அங்கம் முற்றிற்று.

---

## களம் 3. அங்கம் 3.

## நாரதர் பிரவேசம்

பாட்டு

ராகம்: தேவகிரியா. நாடிமாடமறசித்திவோ. தாளம்: ஆதி

பல்லவி

சத்யரூப பரிபூரணா, ஜெகத்காரணா (சத்ய)

அனுபல்லவி

நித்ய நிர்மலனான நிர்குணசீலனே
நிகில ஜனவினுத சுகபரி பாலன (சத்ய)

சரணம்

பதிதபாவன பாபாஹித கிருபாகரா
பரம அத்வைத, த்வைத, வசிஷ்டாத்வைததரா
ஸ்ருதி பரவிய நாயகனே நிரந்தரா
சுபகரவிபுதர்கள் ஸ்தோத்திர பராபரா (சத்ய)

**கிருஷ்ணன்:** தாதா! நமஸ்காரம்; வரவேண்டும் வரவேண்டும்.

**நாரதர்:** கோபாலகிருஷ்ணு! என்ன ஆச்சர்யம். சகல அண்ட பிண்ட சராசரங்களுக்கும் பிதாவான நீ என்னை தாதா வென்று அழைப்பது உசிதமல்ல. இருந்தாலு மிருக் கட்டும், அவதாரத்துக்கு தகுந்தபடி.

**கிருஷ்ணன்:** மகரிஷே! தங்களுடைய ஆகமனத்தால் நான் கிருதார்த்தனுனேன். தன்யோஸ்மி. வந்தகாரண மேதோ?

**நாரதர்:** கோபாலா! நீ இந்த பூலோகத்தில் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனுர்த்தம் அவதரித்த தீனதயாபர மூர்த்தி ஸ்ரீமந் நாராயணனென்பதை எல்லா முனிவர் களும் அறிவார்கள்.

**கிருஷ்ணன்:** மகரிஷே! அபிமானத்தால் ஏன் அதிக ஸ்துதி? கம்சன் முதலான பாபிகளை சம்ஹரித்து உலகத்தை ரக்ஷிக்க.

**நாரதர்:** ப்ரபோ! ஆதியில் இரண்யாக்ஷன் இரண்யகசிபு என்ற இரண்டு அசுரர்களையும், வராக நரசிம்ம ரூபமாக சம் ஹரித்தாய். அவர்கள் ராவண கும்பகர்ணன் என்று இரண்டு ராக்ஷதர்களாகப்பிறந்து உலகத்திற்கு இம்சை செய்தார்கள். அப்போது நீ தசரதராஜகுமாரனுய், ஸ்ரீராமனுக அவதாரம்செய்து அவர்களை சம்ஹரித்தாய். அந்த இரண்டு பேர்களே இப்போது சிசுபாலன், தந்த வக்ரன் என்று இந்த பூமியில் பிறந்திருக்கிறுர்கள். அவர்களுடைய உபத்திரவம் பொறுக்க முடியவில்லை. அவர்களை தாங்கள் சம்ஹரித்து உலகத்திற்கு க்ஷேமம் உண்டு பண்ணவேண்டுமென்று பிரம்மா, இந்திரன் முத

லான தேவர்கள் என் மூலமாய் தங்களிடம் தெரியப் படுத்தச் சொன்னார்கள்.

**கிருஷ்ணன்:** மகரிஷே! யுக்தம். அப்படியே செய்கிறேன்.

**நாரதர்:** நான் வருகிறேன்.

**கிருஷ்ணன்:** நமஸ்கரோமி! (நாரதர் போகிறார்.)

**கிருஷ்ணன் :** அண்ணா! நாரதருடைய வாக்யத்தாலே சிசுபாலனைக் கொல்லவேண்டியதற்காக யுத்த யாத்திரை செய்யவேண்டிய தவசியம். ஆனால் தர்மபுத்திரன் ராஜசூய யாகத்திற்கு வரும்படி நிருபம் அனுப்பியிருக்கிறார். முதலில் எதற்கு போவதென்பது ஆலோசனை சொல்லவேண்டும்.

**பலராமன் :** கிருஷ்ணா! ராஜசூய யாகத்திற்கே போவோம். அந்த துஷ்ட சிசுபாலனும் தந்தவக்ரகனும், வருவார்களென்பது நிச்சயம். அவ்விடத்திலேயே காரியத்தை முடிக்கலாம்.

**கிருஷ்ணன் :** உசிதம். உசிதம். அப்படியே செய்வோம்.

3-ம் அங்கம் முற்றிற்று:

---

## களம் 3. அங்கம் 4.

### ராஜசூய யாக சபை.

**தர்மர் :** சபையோர்களே! பகவத் கிருபையாலும் இஷ்ட பந்துக்களுடைய உதவியாலும் இந்த ராஜசூய யாகம், நிர்விக்கினமாக முடிந்தது.

**பீஷ்மர் :** தர்மநந்தனா! தர்மிஷ்டனான உன்னுடைய காரியங்கள் ஒன்றிலும் குறைவு ஏற்படாது. உனக்கு மென்மேலும் க்ஷேமமே உண்டு.

**தர்மர் :** தாதா! இந்த எக்ஞத்தில் இங்கு வந்த, ருத்விக்குகளுக்கும், மஹரிஷிகளுக்கும், பிராம்மணர்களுக்கும் கிரமமாக சம்பாவனை செய்ய வேண்டியதல்லவா?

பீஷ்மர் : ஆம். ஆம். அவசியம் செய்யவேண்டும்.

தர்மர் : யாருக்கு அக்ரதாம்பூலம் கொடுப்ப தென்பதில் எனக்கு சரியான ஆலோசனை சொல்லவேண்டும்.

பீஷ்மர் : சகலசாஸ்திரங்களிலும் வல்லமைபெற்றவர்களுக்கு தான் அக்ரதாம்பூலம் கொடுக்கவேண்டும்.

சகாதேவன் : சரி, தாதா சொல்லிய வாக்கியத்தின் சாரத்தை ஆலோசித்தால் ஸ்ரீமன் கோபால கிருஷ்ணனுக்கே அக்ரதாம்பூலம் கொடுப்பது உசிதமாய்த் தோன்றுகிறது. அவரே சகல சாஸ்திர ப்ரவீணர், லோக பூஜ்யர்.

பீஷ்மர் : சரி. சரி. அப்படியே செய்யலாம்.

துரோணுதிகள் : உசிதம், உசிதம்.

சிசுபாலன் : சீ! சீ! இது என்னசபை. தாரதம்மியம் தெரியாத சபை. என்ன நியாயம். இப்படி ஓர் பெரிய யாகத்தைச் செய்து முடித்தும் மனுஷ்ய தாரதம்மியம் அறியாமல் இப்படி சபையை அவமானம் செய்யலாமா? துரோணர் முதலான ஆச்சாரியர்களும் வியாஸர் முதலான மஹரிஷிகளும், க்ஷத்திரிய வீராதி வீரர்களும் நிறைந்த மஹாசபையில் பெரிய பெரிய மஹான்களை நிராகரித்துவிட்டு கேவலம் மாடு மேய்க்கும் இடையனுக்கா அக்ரதாம்பூலம்? அவனுக்கு க்ரீடாதிபத்யம் உண்டா? அவனொரு சக்ரவர்த்தியா? கேவலம் தூர்த்தன், வஞ்சகன், பதிதன், திருடன், கோபிகைகளைக் கூடிக்கலந்த ஜாரன், சோரன் இவனுக்கா அக்ரதாம்பூலம்? கொடுத்த தர்மனையும் ஆலோசனை சொன்ன சகாதேவனையும், உதவிக்கு வருபவர்களையும், இந்த மாயகிருஷ்ணனையும் பார்த்து விடுகிறேன் ஒருகை. யாரடா! எடு ஆயுதம்.

தந்தவக்ரன் : ஆம். யார் வந்தாலும் வரட்டும்.

கிருஷ்ணன் : (தனக்குள் ஓர் புறமாக) இந்த சிசுபாலன் நம்மை தினம் தூஷிப்பவனாயினும், இவன் தாயாருக்கு நான் கொடுத்திருக்கும் வாக்கின் பிரகாரம், ஒவ்வொரு

நாளும் நூறு நிந்தனைக்குட்பட்டால் [illegible]
மார்க்கமில்லை.

சிசுபாலன்: முழு மூடனுக்கா தாம்பூலம்?

கிருஷ்ணன்: தொண்ணூற்று ஒன்பது.

சிசுபாலன்: மடையனுக்கா அக்ரதாம்பூலம்?

கிருஷ்ணன்: நூறாயிற்று, அடே!

### சிசுபாலன் தந்தவக்ரன் வதம்.

(இருவரும் சாபம் நீங்கி ஜய விஜயாளாய் மீண்டும் வைகுண்டம் சேர்ந்து கருடவாகனரூடராயிருக்கும் ஸ்ரீமந் நாராயணன் பக்கலில் நின்று கைங்கிரயம் புரிகிறார்கள்)

### பகவானின் கருடவாகனக் காட்சி.

### களம் 3. அங்கம் 5.

### நாரதர் பிரவேசம்.

நாரதர்: கோபாலா! உமது மகிமையே மகிமை, உன்னுடைய அனுக்ரஹத்தினாலேயே, இந்த உலகத்தில் சகலபிராணிகளும், சர்வாபீஷ்டங்களையும் அடைகிறார்கள். பாண்டவ சகாயன் பார்த்தசாரதி என்று உத்தமமான கீர்த்தியை பெற்றாய் பக்தானுகூலா! நமஸ்காரம்.

கிருஷ்ணன்: மஹரிஷே! துவாபரயுகத்தின் அந்திய பாகம் முடியும் சமயம் வந்தது.

நாரதர்: அதனாலென்ன?

கிருஷ்ணன்: சகல தர்மங்களும் லோபித்துவிடுமே.

நாரதர்: ஸ்வாமி! எது எப்படியாயினும் தங்களுடைய திரு நாமத்தை பக்தியுடன் ஜபித்தால் சகல சித்திகளையும் பெறலாம்.

கிருஷ்ணன்: மஹரிஷே! தாங்கள் கலியுகாந்தம் வரையில்பூமியிலிருந்து பக்தர்களுக்கு தத்வோபதேசம் செய்து பிரம்மாவுடன் பரமபதத்துக்கு வாரும்.

5-ம் அங்கம் முற்றிற்று.

## களம் 3. அங்கம் 6.

### கலியுகம்.

நாரதர்: நமஸ்காரம்.

கலிபுருஷன்: நானும் எனது சகாவான டம்பனும், பலவித மாய் ஆலோசித்ததில் தர்மநாஸம் பண்ணுவதே இக்கா லத்துக்கு உசிதமென்று தீர்மானமாச்சுது. தர்மத்தை எங்கு தேடிப்பார்த்தும காணப்படவில்லை. ஏதோ தர்ம தேவதையானது பசு ரூபத்தை தரித்திருப்பதாக கேள் விப்பட்டேன், அந்தப் பசுவைக்கண்டால் சம்ஹரித்து விடுவேன். ஓ! ஹோ! அதோ வருகிறது ஒரு பசு. அதன் சொரூபத்தை யோசித்தால் அதுதான் தர்ம பசுவாக இருக்கவேண்டும். சரி. சரி. பார்த்தேன். அதுதான் தர்ம பசு. அந்த தேனுவினுடைய அவயவங்களில் சகல தேவர்களும் வசிக்கிறார்களாம். சிரசில் பிரம்மனும்,கண் களில் விஷ்ணுவும், கழுத்தில் ருத்திரனும், கண்களில் சந்திர சூரியர்களும், நான்கு கால்களில் நான்கு வேதங் களும், நான்கு ஸ்தனங்களில் நான்கு சமுத்திரங்களும் மற்றும் அவயவங்ளில் சகலதேவர்களும் வசிக்கிறார்க ளாம். அந்த தர்மபசுவையே சம்ஹரித்து என்னுடைய கலி தர்மத்தையே ஸ்தாபிக்கிறேன்.

கிழவன்: அடே! அடே! பசுவைக்கொல்லாதே.

கலிபுருஷன்: ஏன் கொல்லக்கூடாது?

கிழவன்: பசுவைக்கொல்வது மஹாபாவம்

கலிபுருஷன்: பேசாதே, பசுவையும் உன்னையும் சேர்த்துக் கொல்வேன்.

கிழவன்:

தெம்மாங்கு மெட்டு

பாட்டு.

தர்மப்பசுவை வதைசெய்திடலாமா
தாங்கா பெரும்பாவத்தால் மாய்ந்திடப்போமோ

**கலிபுருஷன் :**

ஏண்டா கிழப்பயலே என்முன் நில்லாதே
இங்கெனக்கு புத்திமதி ஒன்றும் சொல்லாதே

**கிழவி :**

ஐயோ பசுவைக் கொல்லலாகாது சாமி
அநியாயம் செய்திடப் பொறுக்காது பூமி

**மனைவி :**

இந்த வீட்டு சமையல் வேலை என்னாலாகாது
இந்த கிழவியே செய்யட்டுமிப்போது

**மனைவி :** என்னால் சமையல் செய்ய முடியாது. உங்கம்மா தான் செய்யட்டுமே.

**கலிபுருஷன் :** நீ பேசாம குந்திக்கோ. ஒரு வேலையும் செய்யவேண்டாம். வீட்டிலே எல்லா வேலைகளும் அந்த கிழவனும், கிழவியுந்தான் செய்யணும்.

இனிமேல் அவுங்கதான் சட்டிபானை கழுவணும், சமையல் பண்ணணும், உனக்கு போடணும், நீ திங்கணும், நான் பார்க்கணும். வாடி என் ராசாத்தி.

**கிழவன் :** நான் சொல்ரதைக்கேள்ரா. பசுவைக் கொல்லாதேடா. பாபமடா. வேண்டாமடா.

**மனைவி :** அவர் எப்படியாவது போகிறார் உனக்கென்ன.

**கிழவன் :** நான் அப்பவே சொன்னேன். நம்ம பையனுக்கு சொந்தத்திலே உன் அண்ணம்பொண்ணைக்கட்டவேண்டாமண்ணு சொன்னேன். உங்கண்ணமகளைத்தான் கட்டுவேன் இன்னு ஒருகாலாலே நின்னியே அப்போ. இப்போ படுத்திவைக்கிறபாட்டைப்பார். நீ ஏண்டி அழுரே.

**கிழவன் :** நான் சொல்றதைக்கேள்ரா. பசுவைக்கொல்லாதே.

**கலிபுருஷன் :** பேசாதே கிழட்டுப்பயலே.

**ராசாத்தி** வருத்தப்படாதே, சந்தோஷமாயிரு. இனிமேல் நீ ஒரு வேலையும் செய்யவேண்டாம். வீட்டிலே எல்லா வேலைகளும் அவர்களே செய்யட்டும். நான் இனிமேல் அவுங்க பேச்சுபடி நடக்கமாட்டேன். இனி எப்பவும் உம்பேச்சுபடியே நடக்கிறேன் இது சத்தியம்.

6-ம் அங்கம் முற்றிற்று,

---

களம் 3. அங்கம் 7.

கலி நாவதாரம்.

**கலிகி :** இந்த கலியுகத்தின் கடைசியான சமயத்தில் சகல துஷ்டர்களையும் சம்ஹாரம் செய்து கெயாக்ஷேத்திரத்தில் விஷ்ணு பாதத்தை தெரிசித்து, துளசி தீர்த்தம் அர்ப்பணம் செய்யப்போகிறேன்.

**நாரதர் :** கலியுகம் முடிந்தது. கோரமான தாபங்கள் ஏற்பட்டுவிட்டது. சந்தர்தாரையாக மழை பெய்கிறது. இனி இந்த பிரபஞ்சம் அழிந்துவிடும். ரிஷிகள் யாவரும் ஜந்லோகம் செல்லவேண்டியது தான் உசிதம். நானும் சத்தியலோகம் செல்லுகிறேன்.

தசாவதாரம் முற்றிற்று.

ரகுபதிராகவ ராஜாராம், பதிதபாவன சீதாராம்.

—மங்களம்.



---

EVERYMANS PRESS, MADRAS.